


# ஓரியண்ட்

## சிகரெட்

நேஷனல் டுபாகோ கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

புதிய 40 B. H. P. "பௌலர்" வெர்டிகல் 1100 R. P. M. டீஸல் ஆயில் என்ஜின்களும், S. L. 3" கிர்லோஸ்கர் பம்புகளும், இங்கிலீஷ் 8 H. P. மோட்டாருடன் இணைக்கப்பட்டுள்ள 4"×3" பம்பு செட்டுகளும் தற்சமயம் கைவசமுள்ளன.



விபரங்களுக்கு:

## ஸாம்ஸன் & கோ.

**என்ஜின், எலக்ட்ரிக் மோட்டார், பம்புஸெட் வியாபாரிகள்**

**8/22, பிராட்வே, மதராஸ்**

---

## கவர்ச்சியான ரகங்கள் நவீன (1948) மாடல்கள்




**எல்லாம் ஸ்விஸ் தயாரிப்பு — உயர்ந்த ரிவர் — 3 வருட உத்தரவாதம்**

| நெ. 1 & 2 (வளைவு டோனோ) | | நெ. 3 லேடிஸ் ரிஸ்ட் வாட்ச் | | நெ. 4 தட்டை உருவம் | |
|---|---|---|---|---|---|
| க்ரோம் 5 ஜுவல் | ரூ. 40/- | 4 ஜுவல் க்ரோம் | ரூ. 40/- | 4 அலாய் 5 ஜுவல் க்ரோம் | ரூ. 25/- |
| கபீரியர் 7 ,, | ரூ. 45/- | 7 ,, ,, | ரூ. 55/- | ,, சென்டர் செகண்டு | ரூ. 32/- |
| ரோல்டு கோல்டு | ரூ. 48/- | 7 ரோல்டு கோல்டு | ரூ. 65/- | ,, ரோல்டு கோல்டு | ரூ. 46/- |
| ,, கபீரியர் | ரூ. 62/- | 15 ஜுவல் க்ரோம் | ரூ. 80/- | 7 ஜுவல் கபீரியர் | ரூ. 52/- |
| 15 ஜுவல் க்ரோம் | ரூ. 70/- | 15 ரோல்டு கோல்டு | ரூ. 110/- | 15 ,, க்ரோம் | ரூ. 40/- |
| 15 ரோல்டு கோல்டு | ரூ. 80/- | 15 9 காரட் கோல்டு | ரூ. 160/- | 15 ,, ரோல்டு கோல்டு | ரூ. 65/- |

பாக்கிங் தபால் செலவு தனி. ஆர்டர் செய்யும்போது கடிகார நம்பர் குறிப்பிட்டு எழுதவும்.

**H. DAVID CO., Post Box No. 11424, CALCUTTA**

**எச். டேவிட் கம்பெனி, தபால் பெட்டி நெ. 11424, கல்கத்தா**

# எல்லோரும் இவள் பற்களை மெச்சுகிறார்கள்

—என்றாள் அவள் தாய்







ஆனால் பல்வைத்தியர்.—

## "நீ இப்பற்களை எல்லாம் இழக்கவேண்டியதுதான்" என்றார்

உங்கள் பற்கள் இப்பொழுது எவ்வளவு வெண்மையாகவும் அழகுடையதாகவும் இருந்தாலும் ஈறுகள் நோயுற்றால் உபயோகமற்றதாகின்றன. பற்களைப்போலவே ஈறுகளையும் அவசியம் கவனிக்கவேண்டும். தவறாமல் எஸ். ஆர் டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். ஈறுகளை உறுதியாக்கி ஆரோக்கியமூட்ட பல் வைத்தியர்கள் பயன்படுத்தும் ஸோடியம் ரிஸினோலியேட் சேர்ந்த டூத்பேஸ்ட் இது ஒன்றே. மேலும், எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை பளிச்சென்று துப்புரவாகவும், வெண்மையாகவும் வைத்துக்கொள்கிறது.

உங்கள் பற்களைக்காப்பாற்ற
ஈறுகளை பாதுகாத்துக்கொள்ளுங்கள்




**ஜிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட்**

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜா
சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினால் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களைவிடச் சக்தி வாய்ந்தது.

●

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

---

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள்:

என். தேசாய் கௌண்டர் & கோ.,
14, பத்தர் தெரு, சென்னை










செய்திகளை முந்தித்தருகிற தினப் பத்திரிகைகள்

## தினத்-தந்தி

சென்னை & திருச்சி

## தந்தி மதுரை

## தினத்-தாள் கோயமுத்தூர் & சேலம்

"தினத் - தந்தி" ஆபீஸ்,
41, கச்சேரி ரோட், மைலாப்பூர், சென்னை

கொழும்பில் தினத் தந்தி ஏஜெண்ட்:
A. S. R. S. & Co.,
அருள் நிலையம், 29, பிச்சோல் லேன், கொழும்பு










மலர் 8 | இதழ் 2 — ஆகஸ்டு 8 — சர்வதாரி ஆடி 24



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

★




★

"நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை"

என்று தமிழ் மூதாட்டி அருமையாகக் கூறிவிட்டுப் போனாள். நமது சட்ட சபைத் தலைவர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை இருக்கிறாரே. அவரைப் போல் இன்னும் பத்துப்பேர் இருந்தால் நாட்டில் மழை கொட்டு கொட்டு என்று எக்காலமும் கொட்டிக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஹரிஜன ஜாதியினரை இனி 'தாழ்த்தப்பட்டவர்கள்' என்று சொல்வதற்கு முடியாதபடி உயர்ந்த பதவியில் அமர்ந்து உறுதியாகச் சட்ட சபை அக்கிராசனத்தை அடக்கி ஆண்டு வரும் ஸ்ரீ சிவசண்முகம் ராஜாஜியிடம் அமைந்த விசுவாசம் உள்ளவர்களில் ஒருவர். அந்தக் காலத்தில் ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் ஹரிஜனங்களுக்குச் செய்த தொண்டைக் காட்டிலும் இன்று ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் அதிக உதவி புரிந்திருக்கிறார் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. ஆகவே தம் சட்டசபையாரை [illegible] சபையை அலங்கரிப்பதற்கு ராஜாஜி படத்தைத் [illegible] பித்தாபுரம் மகாராஜாவின் உத்தரவுப் படிப்பிக்ஷை கொண்டார். படத்தைத் திறந்துவைக்க ஜனாதிபதியையும் அழைத்தார். திருச்சண்முகம் இந்தியாவின் முதல் இந்திய கவர்னர் ஜெனரலைப் பற்றி இந்தியாவின் முதல் பிரதம மந்திரி நமது பண்டிதஜியை சொல்லச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்தார். தமிழ் மக்களுக்கு ஓர் அரும் வாய்ப்பு கிடைத்தது. சட்டசபை மண்டபம் மலர்களாலும், மலர்ச் செண்டுகளாலும், மாலைகளாலும், மலர்ந்த முகங்களாலும் காட்சி அளித்தது. ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளையோ காதாரச் சிரித்துக்கொண்டிருந்தார்கள், மற்றவர்களின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்?




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 2

# என்ன சேதி?

## வெட்கப்பட்டால் முடியுமா?

“வெட்கம் வாழைக்காய்க் கறியாகுமா?” என்றானாம் ஒருவன். அவன் திருடிய வாழைத் தாறை அவன் தலையிலே கட்டி அதிகாரிகள் அவனைக் கிராமப் பிரதட்சணம் செய்ய வைத்தார்கள். அந்த ஊர்வலம் அவனுடைய வீட்டுக்கு எதிராக வந்த போது, தாறிலிருந்து இரண்டு காய்களைப் பிய்த்து அவன் மனைவி நிற்கும் இடத்தில் வீசி எறிந்தான். வெட்கங்கெட்ட அந்தச் செய்கையைக் கண்டு எல்லோரும் சிரித்தனர். “இதற்கெல்லாம் வெட்கப் பட்டால் வாழைக்காய்க் கறி தின்ன முடியுமா?” என்று அவர்களை அவன் கேட்டானாம்!

அது போலவே, “எல்லோரும் நகைப்பார்களே; தூற்றுவார்களே; மானம் போய் விடுமே என்றெல்லாம் வெட்கப் பட்டால் கொள்ளை லாபம் சம்பாதிக்க முடியுமா?” என்று கேட்கிறார்கள் நமது ஆலை-ஜவுளி முதலாளிகள்! அவர்கள் தனித்தனியே நல்ல மனிதர்களாக இருக்கலாம். ஆனால், மொத்தத்தில் அவர்கள் பெரும் கொள்ளைக்காரர்கள் என்பது இப்போது ருஜுவாகி விட்டது. இல்லாவிட்டால் மீண்டும் ஜவுளி கண்ட்ரோல் முறையை அமுலுக்குக் கொண்டு வரும்படியான நிர்ப்பந்தம் இந்திய சர்க்காருக்கு ஏற்படுமா?

## அம்பலமாயிற்று!

சர்க்கார் வகுத்துள்ள புதிய முறைகளின்படி மொத்த வியாபாரிகளிடமிருந்து நியாயமான விலைக்கு ஜவுளிகளை வாங்கிக் கொள்ள சர்க்காருக்கு அதிகாரம் உண்டு. அவ்விதம் வாங்கிய ஜவுளிகளை சர்க்கார் தாங்கள் ஏற்படுத்தும் சில்லறைக் கடைகள், கூட்டுறவுச் சங்கங்கள் முதலியவற்றின் மூலம் ஜனங்களுக்கு நியாயமான விலைக்குக் கிடைக்க ஏற்பாடு செய்வார்கள். அந்தந்தப் பிரதேசங்களிலுள்ள சகல ஜனங்களுக்கும் ஜவுளிகள் நியாயமான விலைக்குக் கிடைக்க வேண்டும் என்பதற்காக மாகாண சர்க்கார்களுக்கும் சமஸ்தான சர்க்கார்களுக்கும் தேவையான அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன. எனவே, சென்ற ஜனவரி மாதத்தில் இருந்ததைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமாகியிருக்கும் ஜவுளி விலைகள் அதிசீக்கிரத்தில் குறைந்து விடும் என்று எதிர்பார்க்கலாம்.

கண்ட்ரோல் முறையை மீண்டும் அமுலுக்குக் கொண்டு வர நேர்ந்தது வருந்தத் தக்கது என்றாலும், மேற்கொண்டும் ஏழை ஜனங்கள் கஷ்டத்துக்கு உள்ளாகாமல் தடுப்பதற்கு ஒரே வழி அது தான் என்றே சர்க்கார் அவ்வாறு செய்துள்ளனர். ஒரு விதத்தில் ஜவுளி கண்ட்ரோல் ரத்தான சில மாதங்களுக்குள் மற்றொரு விதத்தில் அது அமுலுக்கு வந்திருப்பது இரண்டு உண்மைகளை வெளிப்படுத்தியிருக்கின்றது. அதாவது ஜனங்களின் க்ஷேமத்தில் சர்க்காருக்குள்ள சிரத்தை வெளியாகியிருக்கிறது; ஜவுளி முதலாளிகளின் சுய ரூபமும் அம்பலமாகியிருக்கிறது.

## பழி சுமத்தும் அக்கிரமம்!

ஹரிச்சந்திரனை ஒரு பொய்கூடச் சொல்லும்படி செய்ய யாராலும் முடியவில்லை! அதுபோலவே பாகிஸ்தான் அதிகாரிகளை ஒரு நிஜம்கூடச் சொல்லும்படி செய்ய எவராலும் முடியாதுபோல் இருக்கிறது! கலப்பற்ற பொய்களைக் கூசாமல் கூறுவதில் தங்களுக்கு ஈடு இணை இல்லையென்பதைப் பாகிஸ்தான்

அதிகாரிகள் காட்டி விட்டார்கள். பாகிஸ்தான் வெளிநாட்டு மந்திரி ஸர் ஜபருல்லாகான் ஐக்கிய நாடுகள் சபையில் அவிழ்த்த பொய் மூட்டைகளைக் கண்டு உலகமே திக்குமுக்காடியது. "காஷ்மீரத்திலே இந்தியத் துருப்புகள் புரிந்த அட்டூழியங்கள், ஐரோப்பாவில் நாஜியர் புரிந்த அட்டூழியங்களையும் மிஞ்சி விட்டன" என்று சமீபத்தில் பாகிஸ்தான் மந்திரிகளில் மற்றொருவர் கூறினார். யூதர்களை நாஜியர் வேட்டையாடினதைப் போன்று தற்போது பாகிஸ்தானிலிருந்து யூதர்களை விரட்டியடித்து வரும் பாகிஸ்தான் மந்திரிகள் இந்தியா மீது அவ்வாறு அபாண்டமான பழியைச் சுமத்துவது பட்டப் பகலில் உலகத்தை ஏமாற்றும் வித்தை அல்லவா? இந்நிலைமையில், வஞ்சகம், பொய், சூது இவற்றை அடிப்படையாகக் கொண்டே பாகிஸ்தான் நிர்மாணிக்கப்பட்டு வருகிறது என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறுவதில் தவறு என்ன?

காஷ்மீர யுத்தத்துக்கும் பாகிஸ்தானுக்கும் நேரடியான சம்பந்தம் எதுவுமே இல்லை என்று ஜபருல்லாகான் ஐக்கிய நாடுகள் சபையில் சத்தியம் செய்தார். ஆனால், இப்போது காஷ்மீரப் பிரச்னையை நேரில் பரிசீலனை செய்வதற்காக வந்துள்ள ஐக்கிய நாடுகள் சபைக் கமிஷனர்கள் காஷ்மீர யுத்தத்தில் பாகிஸ்தான் துருப்புகள் கலந்துகொண்டிருப்பதை நேரில் பார்த்தார்கள். காஷ்மீர யுத்தத்தை நடத்துவதே பாகிஸ்தான் சர்க்கார்தான் என்பதும் தஸ்தாவேஜுகளின் மூலம் அவர்களுக்குத் தெரிந்துவிட்டது.

## பொருந்தாத பொய்!

தங்களுடைய பொய்க்கூற்றும் வஞ்சகமும் அறவே அம்பலமாகி விட்டதைக் கண்ட பாகிஸ்தான் சர்க்கார் இப்போது உண்மையை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். காஷ்மீர யுத்தத்தில் பாகிஸ்தான் துருப்புகள் கலந்து கொண்டிருப்பது உண்மைதான் என்று பாகிஸ்தான் சர்க்கார் பிரதிநிதிகள் காஷ்மீர் கமிஷனிடம் கூறியிருக்கிறார்களாம். அதற்குக் காரணமாக அவர்கள் தங்களுடைய ஏக போக பாத்தியமான சில அண்டப் புளுகுகளை அள்ளி வீசியிருக்கிறார்கள்.

பாகிஸ்தான் மீது படையெடுக்க இந்திய சர்க்கார் திட்டம் போட்டிருக்கிறார்களாம். அத்தகைய படையெடுப்பைத் தடுக்க வேண்டும் என்றே காஷ்மீர் யுத்தத்தில் பாகிஸ்தான் துருப்புகள் கலந்துகொண்டிருக்கின்றனவாம். மேற்படி யுத்தத்தில் பாகிஸ்தான் துருப்புகள் கலந்துகொண்டு சில மாதங்கள் ஆகின்றன என்று பாகிஸ்தான் பத்திரிகையே கூறுகிறது. அவ்வாறு கலந்துகொண்ட போதே பாகிஸ்தான் சர்க்கார் மேற்படி காரணத்தைக் கூறியிருப்பார்களாயின், அவர்கள் பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லுகிறார்கள் என்றாவது நினைக்கலாம். ஆனால், இப்போதோ அதற்குக் கூட இடம் இல்லை. பொருந்தாத பொய்களைச் சளைக்காமல் கூறுகிறார்கள் என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. எனினும் பாகிஸ்தான் சர்க்காருடைய வஞ்சகத்தையும் பொய்க் கூற்றுகளையும் நேரில் கண்டும் கேட்டும் இருக்கும் ஐ. நா. சபையின் காஷ்மீர் கமிஷன் என்ன செய்யப் போகிறது, பார்க்கலாம்.

## சேர்க்கப்பட்டது

சென்னை மாகாணத்தில் பாக்கியிருந்த சாண்டூர் சமஸ்தானமும் கடைசியாகச் சென்னை மாகாண நிர்வாகத்தில் சென்ற வாரம் சேர்ந்துவிட்டது. 'சேர்ந்துவிட்டது' என்று கூறுவதைக் காட்டிலும் 'சேர்க்கப்பட்டுவிட்டது' என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும். இந்த மாகாணத்திலுள்ள சமஸ்தானங்களில் சாண்டூர்தான் மிகமிகச் சிறியது. ஜனத்தொகையில் அது புதுக்கோட்டை சமஸ்தானத்தைப்போல முப்பதில் ஒன்று என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

அப்படியிருந்தும் புதுக்கோட்டை, பங்கனபல்லி முதலிய சமஸ்தானங்களின் சிறந்த உதாரணத்தைப் பின்பற்ற அந்தச் சமஸ்தானம் விரும்பாது முரண்டிக் கொண்டிருந்தது. சாண்டூர் சமஸ்தானாதிபதியும் அவருடைய தாசர்களும் சுயேச்சை அந்தஸ்து கோரி, இந்திய சர்க்காருடன் ஐக்கியம் அடைய மறுத்தனர். என்ன நேர்ந்தாலும் சமஸ்தான ஜனங்கள் உறுதியுடன் நின்று சாண்டூரின் தனி வாழ்வை நிலைநிறுத்தப் போவதாக சமஸ்தான சட்ட சபையும் பிரகடனம் செய்தது. எனினும், தானாக வலுவில் சேர்ந்து பெருமை அடையட்டும் என்று இந்திய சர்க்காரும் இது வரையில் விட்டுக் கொடுத்துப் பார்த்தார்கள். ஆனால் அவ்வாறு பெருமை அடைய சாண்டூர் விரும்பவில்லை. எனவே இந்திய சர்க்காரின் கட்டளைக்கு இணங்க பெல்லாரி கலெக்டர் போலீஸ், ராணுவத்துடன் சாண்டூருக்குச் சென்று சமஸ்தான நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டார். சமஸ்தானக் கொடி இறக்கப்பட்டு, பாரதத் தாயின் மணிக்கொடி ஏற்றப்பட்டதுடன் சாண்டூரின் தனி வாழ்வு முடிவடைந்தது!

# பீமன் வேலை!



# நிகழ்ச்சிச் சித்திரம்

-சாஸ்திரி

போரின் நெருக்கடியைத் தீர்க்க வல்லவர்கள் எத்தனையோ வித்தைகள் செய்து பார்த்தும் பயனில்லை. கடைசியாக அவற்றின் பிரதிநிதிகள் ஸ்டாலினின் சன்னிதானத்தை நாடியிருக்கிறார்கள்.

அடடா! என்ன கஷ்டகாலம்? என் வாழ்க்கையில் இதற்கு முன் ஒரு தடவையாவது நான் இவ்வளவு பலமான குத்து வாங்கியதில்லையே!

பார்லிமெண்ட்

SHASTRY

# அந்தப் பெயர் வேண்டாம்!

சில காலமாக அதிகமாய் வெளியில் வராமல் அடக்கமாயிருந்த சர்ச்சில் துரை திடீரென்று நம் முன் தோன்றி "நான் தூக்குப் போட்டுக் கொள்ளப் போகிறேன்!" என்றார்.

"வேண்டாம், துரைவாள்! கயிறு தாங்காது!" என்றோம்.

"இல்லாவிடில் உண்ணாவிரத மிருப்பேன்!" என்றார் சர்ச்சில்.

"அதெல்லாம் காந்திஜியும் அவருடைய பைத்தியக்காரச் சீடர்களும் செய்யும் வேலையல்லவா?" என்றோம்.

"இருப்பினும் பரவாயில்லை; தினம் ஆறு தடவை உண்ணாவிரத மிருப்பேன்!" என்றார்.

"தங்கள் சித்தம் எமது பாக்கியம்!" என்றோம்.

"மௌன விரதமும் சேர்ந்து அனுசரிப்பேன். தினம் ஒன்பது தடவை மௌன விரத மிருப்பேன்!" என்றார்.

"உமது விருப்பம்போல்!" என்று சொன்னோம்.

"இனிமேல் எலியைப் பிடிக்க மாட்டேன்; 'மியாவ்' கீதம் பாடமாட்டேன்!" என்றார்.

"சர்ச்சில் ஐயா! இது என்ன கோபம்? யார் செய்த அபசாரம்?" என்றோம்.

"எல்லாம் நீர் செய்த அபசாரந்தான்! இப்போது கூட அந்தப் பெயரைச் சொல்லி என்னை அழைத்தீரல்லவா?" என்றார்.

"எந்தப் பெயருக்குத் துரைவாளின் ஆட்சேபம்?" என்று கேட்டோம்.

"சற்று முன் சொன்னீரே, அந்தப் பெயர்தான்! பார்லிமெண்டில் கேவலம் மௌனசாமி அட்லியிடம் சவுக்கடி வாங்கிக் கொண்டாரே, அவருடைய பெயர்தான்! என்னுடைய பரம வைரிக்கு வைத்து அழைக்க வேண்டிய பெயரை எனக்கு வைத்திருக்கிறீரே?"

"அடாடா! 'சர்ச்சில்' துரையின் பெயரை உமக்கு வைத்ததற்காகவா இத்தனை கோபம்? முன்னேயெல்லாம் நீர் ஆட்சேபிக்க வில்லையே?"

"முன்னே அந்த மனுஷர் யுத்தம் நடத்திக் கொண்டிருந்தபோது பெயர் வைத்தீர்; பொறுத்துக் கொண்டிருந்தேன். யுத்தத்தில் ஜயித்தவராயிற்றே என்று அப்புறமும் பொறுத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அந்தப் பெயரை இனிப் பொறுக்க மாட்டேன். ஒரு நிமிஷமும் பொறுக்க மாட்டேன். பெயரை மாற்றி வைத்து விட்டு மறுகாரியம் பார்க்க வேணும். ஜெனரல் வேவல் என்றாவது, ஸர் ஆர்தர் ஹோப் என்றாவது, காஸிம் ரஸ்வி என்றாவது பெயர் வைத்தாலும் பொறுப்பேன். சர்ச்சில் என்ற பெயரை இனிப் பொறுக்கமாட்டேன். எது எப்படி இருந்தாலும் மனுஷன் கெட்டிக்காரன் என்றாவது இதுவரையில் ஒரு பிரமை இருந்தது. பேசத் தெரியாமல் பேசி, உளறத் தெரியாமல் உளறி, கேவலம் அட்லியிடம் அகப்பட்டுக்கொண்டு திண்டாடியதைப் பார்த்த பிறகு அந்தப் பிரமையும் நீங்கி விட்டதே! அந்த மனுஷன் பெயர் எனக்கு வேண்டவே வேண்டாம்! என்ன சொல்கிறீர்? பெயரை மாற்றுகிறீரா? அல்லது நாக்கைப் பிடுங்கிக் கொண்டு கையை அலம்பிவிட்டு வரட்டுமா?" என்று நமது காரியாலயப் பூனையார் புலிபோலக் கர்ஜித்தார்.

இது பிடிவாதம் பிடிக்கும் சமயம் அல்ல,—விட்டுக் கொடுக்க வேண்டிய சமயம் என்று அறிந்து கொண்ட நாமும் "சரி, சரி! அப்படியே உம்முடைய பெயரை மாற்றி விடலாம். புதுப்பெயர் மவுண்ட் பேட்டன் என்று வைக்கலாமா?" என்றோம். பூனையார் ஒரு தடவை துள்ளிக் குதித்து, "பண்டிட் மவுண்ட் பாட்டனுக்கு ஜே!" என்று கோஷித்துக் கொண்டு, எங்கேயோ 'கிறீச்' என்று கத்திய எலியைத் தேடிச் சென்றார்.

* * *

இவ்விதம் பூனைக்குக்கூடச் சர்ச்சில் என்றால் அவமதிப்பும் அலட்சியமும் உண்டாகும்படியான சம்பவம் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் செப்டம்பர் 30உ நடைபெற்றது. அபகீர்த்தியும் அவப் பெயரும் பெற்ற நைஜாமை ஆதரித்துச் சிபார்சு பேச அன்றைய தினம்

வின்ஸ்டன் சர்ச்சில் தமது திருவாயைத் திறந்தார். அடாடா! திறந்த வாயிலிருந்து சுருட்டுப் புகையுடன் கலந்து வந்த அபத்தங்களுக்கும் அசட்டுத்தனங்களுக்கும் விஷமங்களுக்கும் வெற்று வேட்டுக்களுக்கும் அளவு என்பதே கிடையாது.

நைஜாம் மன்னருக்கு பிரிட்டிஷார் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டும் என்றார் சர்ச்சில். (இந்திய மக்களுக்கு விக்டோரியா மகாராணி கொடுத்த வாக்குறுதி விஷயத்தில் சர்ச்சில் இவ்வளவு அக்கரை எப்போதாவது காட்டியதுண்டா? இல்லை!) நைஜாமின் சுதந்திரத்தை இந்திய சர்க்கார் பறிக்க முயற்சிப்பதைக் கண்டித்தார் சர்ச்சில் (இந்தியாவின் சுதந்திரத்தை பிரிட்டிஷார் பறித்தது பற்றி எப்போதாவது சர்ச்சில் சிந்தித்ததுண்டா? இல்லை.) ஜனநாயகத்துக்கு விரோதமாக இந்திய சர்க்கார் ஒன்றே முக்கால் கோடி ஜனங்களைப் பலவந்தப் படுத்துவதாகக் குற்றம் சாட்டினார். (பிரிட்டிஷார் முப்பத்தெட்டு கோடி இந்திய மக்களைப் பலவந்தமாகத் தங்கள் ஆட்சிக்குள் வைத்திருந்தது ஜனநாயக சம்மதமானதா?) நைஜாம் ராஜ்யத்துக்கு மருந்துகள் போகாமல் தடுக்கும் இந்திய சர்க்காரின் அட்டூழியத்தைக் குறித்து அலறினார். "இராணுவ நடவடிக்கை எடுப்போம்" என்று ஜவாஹர்லால்ஜி எச்சரித்ததைப் பற்றிக் கதறினார். ஐக்கிய தேசங்களின் சபையில் நைஜாமின் கட்சியைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஆதரிக்க வேண்டும் என்று முறையிட்டார். சர்ச்சில் சக்கைப் போடாகப் பேசி வெளுத்துக் கட்டித் துணியையும் கிழித்து விட்டதாக எண்ணிக் கொண்டு அவருடைய கோஷ்டியார் கரகோஷம் செய்து மகிழ்ந்தார்கள்.

எழுந்தார் பிரதம மந்திரி மேஜர் அட்லி தம் வாழ்நாளில் என்றும் காட்டியிராத ஆத்திரத்துடன் பளீர் பளீர் என்று கன்னத்தில் அறைவது போலச் சர்ச்சிலுக்குப் பதில் சொன்னார்.

"ஹிந்துக்கள் எது சொன்னாலும் அது பசகு என்று வைத்துக்கொண்டு வாதிப்பது உமது வழக்கமாகிவிட்டது. அதனாலே தான் இவ்வளவு அபத்தமாய்ப் பேசினீர்!" என்றார்.

"வெட்கக் கேடு!" "வாபஸ் பெறுக!" என்று எழுந்த சர்ச்சில் கோஷ்டியின் கூச்சல்களை அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

"நைஜாம் அன்னிய நாட்டுச் சம்பந்தத்தை இந்திய சர்க்காருக்குக் கொடுத்து ஒரு வருஷத்துக்கு 'ஸ்டாண்டு - ஸ்டில்' உடன்படிக்கை செய்து கொண்டிருக்கிறாரே? அப்போது ஹைதராபாத் எப்படிச் சுதந்திர நாடு ஆகும்?" என்று கேட்டார்.

"இந்தியாவில் ஜனநாயகம் நிலவ வேண்டும என்பதில உமக்குத் திடீரென்று சிரத்தை வந்திருப்பது விசேஷந்தான். நைஜாமில் ஜனநாயக முறைப்படி பொதுமக்களின் வாக்கு எடுக்க இந்திய சர்க்கார் முன்னமே ஒப்புக் கொண்டிருக்கின்றனர். ஆகையால் உம்முடைய ஆத்மா சாந்தி பெறட்டும்!" என்றார்.

"மருந்துகள் போகாமல் தடுக்கிறார்கள் என்பது ஒரு கட்சியின் வாக்குமூலந்தானே? அதை எதற்காக வேத வாக்காகக் கொள்ளவேண்டும்?" என்று கேட்டார். "ஒரு கடுமையாய்ப் பேசியிருக்கிறார் என்றால், இன்னொரு கட்சிக்காரர்கள் அதைக் காட்டிலும் கடுமையாகப் பேசியிருப்பதை எடுத்துக் காட்டட்டுமா?" என்று கேட்டார் "நீரும் உம்முடைய கோஷ்டியாரும் கொஞ்சம் வாயை மூடிக் கொண்டிருந்தால் நைஜாம் பிரச்னை நல்ல முறையில் தீரலாம். காரியத்தைக் கெடுக்காமல் கொஞ்சம் சும்மா இரும்!" என்று பெரும் போடாகப் போட்டு முடித்தார்.

* * *

மேற்படி பார்லிமெண்டு விவாதத்திலிருந்து நைஜாம் மன்னர் ஒரு விஷயத்தை நன்கு அறிந்து கொள்ளலாம். தமக்குக் காலபலம் அவ்வளவாகப் போதவில்லை என்பதைத்தான். நைஜாமின் காலபலம் சரியாயிருந்தால் ஆளனப்பட்ட சர்ச்சில் துரை இப்படி அபத்தமாய்ப் பேசி அட்லியிடம் வாங்கிக் கட்டிக் கொள்வாரா?

திருட்டு ஸிட்னி காட்டன் துரையின் ஆகாச விமான லைசென்ஸ் தான் பறி போயிருக்குமா? கள்ள லங்காஸ்டர் விமானம் கீழே விழுந்து நொறுங்கியிருக்குமா?

இதையெல்லாம் யோசித்து நைஜாம் தாம் தறபோது போகும் வழி சரியான வழியல்ல வென்பதை உடனே உணர வேண்டும். உணர்ந்து நேர் வழியில் இறங்க வேண்டும். அந்த நேர் வழி இந்தியப் பேரரசில் நைஜாம் சேர்ந்து விடுவதுதான்; வேறில்லை.

நைஜாம் இந்திய யூனியனில் சேர்ந்தால் மற்றப் பெரிய சமஸ்தானபதிகளைக் கௌரவமாக நடத்துவது போல் இந்திய சர்க்கார் நைஜாமையும் கௌரவமாய் நடத்துவார்கள்; விசேஷ மரியாதைகளும் செய்வார்கள். போபால் நவாப் இந்திய யூனியனில் சேர்ந்தார்; மனப்பூர்வமாகச் சேர்ந்தார். அதனால் அவருக்கு என்ன குறைவு வந்து விட்டது? ஒன்றுமில்லை.

போபால் நவாபை ஹைதராபாத் நைஜாம் உடனே பின்பற்றுவதுதான் அறிவுடைமை; நைஜாமுக்கு நன்மையும் அதுதான். அறிவுடைமையும் நன்மையும் எது என்பதை நைஜாம் தாமாக உணரா விட்டால் இந்திய யூனியனில் வசிக்கும் முஸ்லிம்கள் நைஜாமுக்கு அதை உணர்த்த வேண்டும்.

போபால் நவாபை நைஜாம் பின்பற்றாவிட்டால், ஜுனாகத் நவாபைப் பின்பற்றும்படி நேரும் என்பதில் ஐயமில்லை! ரஸாக்கியரின் ராட்சஸச் செயல்களோ, சர்ச்சிலின் அதிகப் பிரசங்கமோ மேற்படி விதியிலிருந்து நைஜாமைத் தப்புவிக்க முடியாது.

• • •

காமன்ஸ் சபையில் நடந்த விவாதத்திலிருந்து இந்தியப் பொது மக்களும் ஒரு படிப்பினையை அறிய வேண்டும். இந்தியாவின் சுதந்திரத்துக்கு விரோதிகள் இன்னமும் இங்கிலாந்தில் இருக்கிறார்கள். சமயம் நேரும்போது அவர்கள் இந்தியாவின் தலையிலே பெரிய கல்லைத் தூக்கிப் போடத் தயங்க மாட்டார்கள்!

இங்கிலாந்தில் மட்டுந்தானா இந்திய விரோதிகள் இருக்கிறார்கள்? ஐரோப்பாவில் இருக்கிறார்கள்; அமெரிக்காவில் இருக்கிறார்கள்; ஆப்பிரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும் இருக்கிறார்கள். ஆசியாவைச் சேர்ந்த அரேபியா, ஈரான் முதலிய நாடுகளிலும் அவர்கள் இருக்கக் கூடும்.

நாளைக்குப் பிரிட்டனில் உள் நாட்டு அரசியல் காரணமாக ஆட்சி அரசாங்கம் மாறித் திரும்பவும் சர்ச்சில் பிரதம மந்திரியாகிறார் என்று வைத்துக் கொள்வோம். ஏதாவது ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு இந்தியாவின் சுதந்திரத்தில் தலையிட அவர் தயங்க மாட்டார்.

இதையெல்லாம் எண்ணிப் பார்த்து இந்தியப் பேரரசின் கீழ் உள்ள இந்திய மக்கள் ஒற்றுமையும் கட்டுப்பாடும் பெறவேண்டும்; தேசத்தின் பலத்தை வளர்க்க வேண்டும். இராணுவ பலம், பொருளாதார பலம்,—இரண்டையும் வளர்க்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக இந்த நாட்டைக் காப்பாற்றி, நாட்டின் சுதந்திரத்தை நிலைநாட்டி, சுபிட்சத்தைப் பெருக்கி, சமுதாயத்தைப் புனருத்தாரணம் செய்யும் மகத்தான பொறுப்பை ஏற்று நடத்தும் காங்கிரஸ் மேலோரிடம் பூரண நம்பிக்கை வைத்து அவர்களை முழு மனதுடன் ஆதரித்து நிற்க வேண்டும்.

“சர்ச்சில் இன்னும் இருக்கிறார்! ஜாக்கிரதை!” என்ற எச்சரிக்கை இந்தியர் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் பதிந்திருக்க வேண்டும்.

# ஒரு வழி!


விமான நிலையத்தில்.....
கூட்டம் தாங்க முடியவில்லையே? உள்ளே புகுந்தால் நசுங்கிப் போவேன் போலிருக்கிறதே?


கவர்ன்மெண்ட் மாளிகையில்.....
இங்கும் அப்படியே தான் இருக்கிறது! என்ன செய்யலாம்?


சட்டசபை வாசலில்.
முட்டிப் பார்த்தும் முடியவில்லையே!


கோட்டை மைதானத்தில்.....
முண்டிப் பார்த்தும் சாத்தியமில்லை!


கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில்
சரிசரி! ஒருவழி செய்கிறேன்!.....


நமஸ்தே ' பண்டிட் ஜீ !



# ஜவாஹரைக் கண்டேன்

காட்டூர்க் கண்ணன்

1 நேரு வாராரென்ற சேதியைக் கேட்டுநான்
நேற்றைக்குப் பட்டணம் போயிருந்தேன்!
தேருத் திருநாளைக் கண்டதுபோல் நம்ம
தேசத் தலைவரைக் கண்டு வந்தேன்.

2 ஏரோப் பிளேனில் வாராருன்னு சொல்லி
எத்தனை காரு பறந்த தப்பா!
பாராக் கொடுத்த சிப்பாயும் போலீசும்
பார்க்க அழகான காட்சி யப்பா!

3 பாதையின் ஓரத்தில் சாரிசாரியாய்
பார்க்கவே நின்னிட்ட கூட்டத்தையே
ஏராளமின்னு சொல்லி விட்டேனதை
எண்ணியும் பார்த்தேன் கணக்குவல்லே!

4 காரிலே நின்னு கையைக்குவித்து
கம்பீரமாய் வந்த உத்தமரை
நேரிலே நீவந்து பார்க்கவில்லை—இப்போ
நின்னுநான் காட்டுறேன் பார்த்துக்கொள்ளு!

5 போட்டோ எடுத்தாங்க போட்டியிட்டேயதில்
போகுது நாமும் விழுவோமின்னு
கூட்டத்திலே தலை நீட்டிருக்கேனது
'குண்டூசி'ப் பேப்பரில் வந்திடும், பார்!

6 காரைக்குடிக்கும் போக நினைச்சேன்
கட்டிப் பறக்கவோ ரெக்கை இல்லை!
ஏரைப்பிடித்து வாழு மெனக்கு
ஏரோப்ளேன் வந்து நிக் விடுமோ?

7 பொன்னான வார்த்தையைக் கேட்டுவந்தேன்—அதில்
புத்திக்குப் பட்டுப் புரிந்ததையே
எல்லோரும் கேட்டிடச் சொல்லப்போறேன்—எங்கள்
ஏரிக்கரையிலோர கூட்டம் போட்டு

8 தென்னாட்டுக் காந்தியாம் ராஜாஜியைப்பற்றித்
தெளிவாய் ஜவாஹர் எடுத்துச் சொன்னார்!
உள்ளத் தெளிவுடன் உறுதியும்கொண்ட
உத்தமரென்று உவந்து சொன்னார்!

9 வகுப்புக் கலகத்தை ஓட்டவேணுமதை
வளர்த்திடும் வினரை ஒழிக்கவேணும்
பொறுப்பாக ராசாங்கம் நடத்திடணும்—காலப்
போக்குத் தெரிந்து நடந்திடணும்!

10 வறுமை ஒழியணும் வளர்க்கணும் புத்தியை
வாழ்க்கைத் தரமும் உயர்த்திடணும்
அருமையாய்நாட்டை ஆளும் ஜவாஹரின்
ஆணைக் கடங்கி நடக்கவேணும்!

# அலை ஓசை



## கல்கி

### இரண்டாம் அத்தியாயம்

## ரயில்வே சந்திப்பு

டில்லி ரயில்வே நிலையத்துக்குள் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் பிரவேசித்தபோது பக்கத்துப் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த நூற்றுக்கணக்கான ஜனங்களின் முகங்கள் சீதாவின் கண்களில் தோன்றி மறைந்தன. ஆனால் அவளுடைய கண்களிலோ, கவனத்திலோ அந்த முகங்கள் ஒரு கணமும் நிற்கவில்லை. ஒரே ஒரு சுந்தர முகத்தை,—தன் உள்ளத்தில் உறைந்து ஆத்மாவுடன் கலந்த முகத்தை,—சீதாவின் கண்கள் ஆர்வத்துடன் தேடின. அந்த முகம் தெரிந்ததும், "வசந்தி! அதோ அப்பா!" என்று சீதா கூச்சலிட்டது ரயில்வே ஸ்டேஷன் சத்தங்கள் அவ்வளவுக்கும் மேலாகக் 'கிரீச்' என்று கேட்டது.

சௌந்தர ராகவனைப் பார்த்த பிறகு கூட இந்தச் சனியன் பிடித்த ரயில் எதற்காக மேலே நகருகிறது என்று சீதாவுக்குத் தெரியவில்லை. இத்தனைக்கும், அவ்வளவு அதிகமாக ரயில் மேலே சென்று விடவில்லை. ராகவன் நின்ற இடத்துக்கு அப்பால் சுமார் முப்பது அடி தூரத்தில் சீதா இருந்த வண்டி போய் நின்றது.

"வசந்தி! அதோ பார், அப்பா வருகிறார்!" என்று குதூகலித்தாள் சீதா. "அப்பா எங்கே, அம்மா! காட்டு, அம்மா!" என்றாள் குழந்தை.

கூட்டத்தில் இடிபடாமல் நாஸூக்காகப் புகுந்து விலகிக் கொண்டு சீதா இருந்த வண்டியை நோக்கி வந்து கொண்டிருந்த ராகவன் திடீரென்று பாதி வழியில் நின்றான்.

சீதா இருந்த வண்டிக்கு எதிர்ப்புறத்தில், பிளாட்பாரத்தின் மறு பக்கத்திலிருந்து, ஒரு ரயில் 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு புறப்பட்டது. சௌந்தர ராகவன் அந்த வண்டியை நோக்கினான். ஒரு கணம் அங்கேயே தயங்கி நின்றான். பிறகு சீதாவை நோக்கி வருவதற்குப் பதிலாக, எதிர்ப் புறத்தில் புறப்பட்டுக் கொண்டிருந்த வண்டியை நோக்கி அவசரமாகச் சென்றான். இந்தச் சமயம் அவன் கூட்டத்தையும் நெருக்கத்தையும் பொருட்படுத்தவில்லை. முட்டி-

மோதிக் கொண்டும் இடித்துப் பிடித்துக் கொண்டும் சென்றான். ராகவன் இலக்கு வைத்துப் போன ரயில் வண்டியில் பலகணிக்கு அருகில் இரண்டு பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருத்தியைப் பார்த்து ராகவன் ஏதோ கேட்டான். அவள் ஏதோ பதில் கூறினாள். இவன் திரும்ப ஏதோ சொன்னான். இதற்குள் ரயில் நகரத் தொடங்கியது. கடைசி கார்டு வண்டி போகிறவரையில் ராகவன் அங்கேயே நின்று போகும் ரயிலையும் பலகணிக்கு வெளியே தெரிந்த அந்தப் பெண்ணின் முகத்தையும் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு திரும்பிச் சீதா இருந்த வண்டியை நோக்கி வந்தான்.

மேலே கூறிய நிகழ்ச்சியைச் சீதா கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு நின்றாள். தன்னையும் குழந்தையையும் பார்த்த பிறகு சௌந்தர ராகவன் நேரே தங்களிடம் வராமல் எதிர்ப் பக்கத்து ரயிலை நோக்கிப் போனது சீதாவுக்குச் சிறிது ஏமாற்றம் அளித்தது. இன்னொரு ரயிலில் இருந்த பெண்கள் யார் என்பது அவளுக்குத் தெரியாது. எனினும் தன்னைவிட அவர்களை முக்கியமாகக் கருதி ராகவன் அங்கு போய்ப் பேசியது சீதாவின் உள்ளத்தில் 'சுருக்' என்ற வேதனையை உண்டாக்கிற்று. அவர்கள் என்ன பேசினார்கள் என்பது அவளுடைய காதில் விழவில்லை; அதனாலேயே வேதனை அதிகமாயிற்று.

மேற்சொன்னதெல்லாம் அவளுடைய உள்ளத்தின் ஒரு நிமிஷ நேரத்து அநுபவந்தான். ராகவன் அருகில் வந்ததும் மனது ஒரே குதூகலமடைந்தது. "வசந்தி! அப்பா இட்டப் போ!" என்று சொல்லிக் கொண்டே குழந்தையைப் பலகணி வழியாக வெளியே எடுத்து விட்டாள். குழந்தை தாவிக்கொண்டு அப்பாவிடம் சென்றது. ராகவனும் ஆசையோடு வாங்கிக் கொண்டான். ஆனாலும் அவனுடைய மனது குழந்தையிடம் லயிக்கவில்லை என்பதை அவன் முகம் காட்டியது.

பிளாட்பாரத்தில் நடந்த மேற்படி ஒரு நிமிஷ நாடகத்தைப் பற்றிக் காமாட்சி அம்மாளுக்கு ஒன்றும் தெரியாது. அவள் சாமான் வகையராக்களைச் சரி பார்த்து வண்டியிலிருந்து இறக்குவதில் முனைந்திருந்தாள்.

"சீதா! முதலில் நீ கீழே இறங்கு! சாமான்களை யெல்லாம் இறக்கிய பிறகு நான் இறங்குகிறேன்!" என்றாள் காமாட்சி அம்மாள்.

சீதா வண்டியிலிருந்து இறங்கினாள். போர்ட்டர்களுக்குக் கட்டளை போட்டுக் கொண்டிருந்த சௌந்தர ராகவனுக்குப் பக்கத்தில் போய் நின்றாள். அவனாக ஏதாவது சொல்லுவான், கேட்பான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் அவன் ஒன்றும் பேசுகிற வழியாகக் காணவில்லை.

"நீங்கள் ஸ்டேஷனுக்கு வருவீர்களா, மாட்டீர்களா என்று நானும் அம்மாவும் பந்தயம் போட்டுக் கொண்டு வந்தோம்!" என்றாள் சீதா.

ராகவன் காதில் அது விழுந்ததாகவே தோன்றவில்லை. அவன் மனம் வேறு எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

"புறப்படுகிறதற்கு இரண்டு நாளைக்கு முன்பு வசந்திக்கு உடம்பு சரியில்லை. புறப்பட முடியுமோ, என்னமோ என்று பயமாய்ப் போய் விட்டது!" என்றாள் சீதா.

கொஞ்சம் ராகவனுடைய கவனம் திரும்பியது. "வசந்திக்கு என்ன உடம்பு?" என்று கேட்டான்.

"அஜீரணம் மாதிரி இருந்தது!"

"குழந்தைகளுக்கு அஜீரணமே வரக் கூடாது. குழந்தைகளுக்கு என்ன விதமான உடம்புக்கு வந்தாலும் அது வளர்ப்பவர்களுடைய தப்பிதந்தான்!" என்று ராகவன் கடுமையான குரலில் கூறினான்.

தான் ஆரம்பித்த பேச்சு பிசகாய்ப் போய்விட்டதென்பதை அறிந்து சீதா மௌனமானாள்.

சாமான்கள் எல்லாம் இறக்கப்பட்ட பிறகு காமாட்சி அம்மாள் பெஞ்சுகளுக்கு அடியில் குனிந்து பார்த்துவிட்டு ரயிலிலிருந்து இறங்கினாள்.

ராகவனை அருகில் வந்து பார்த்து, "ஏண்டா, அப்பா! இப்படி இளைத்துப் போயிருக்கிறாயே?" என்றாள்.

"ஆமாம், அம்மா! இளைத்துத்தான் போய்விட்டேன். இத்தனை நாள் உங்களை யெல்லாம் பார்க்காத கவலையினாலே தான்!" என்றான்.

இந்தச் சமயத்தில் அதே ரயிலில் வேறொரு வண்டியிலிருந்து இறங்கிய சூரியா அவர்கள் நிற்குமிடத்துக்குச் சமீபமாய் வந்து சேர்ந்தான்.

ராகவன் அவனை ஏறிட்டுப் பார்த்தான். ஆனால் ஒன்றும் பேசவில்லை. போர்ட்டர்களைப் பார்த்துச் சாமான்களை எடுங்கள் என்றான்.

சூரியாவுடன் ராகவன் பேசாதது சீதாவுக்கு மனக் கஷ்டத்தை அளித்தது. சூரியாவைக் கடைக் கண்ணால் பார்த்தாள்; அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. பிறகுதான் மாமியாரைப் பார்த்தாள்; மாமியார் இன்னமும் சாயான்களை எண்ணுவதில் ஈடுபட்டிருந்தாள்.

பிறகு சீதா மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு, "சூரியாவை உங்களுக்குத் தெரியுமோ, இல்லையோ?" என்று கேட்டாள்.

"எந்தச் சூரியாவை?" என்றான் சௌந்தர ராகவன்.

"எந்தச் சூரியா என்கிறீர்களே? லலிதாவின் அண்ணா சூரியாதான்!"

"மாப்பிள்ளை, ஸார்! அடியோடு என்னை மறந்துவிட்டீர்கள் போலிருக்கிறது!" என்றான் சூரியா.

"ஓகோ! கலியாணத்தின் போது ஒரே கோபமாக இருந்தானே, அந்தப் பையனா? இங்கு எங்கே அப்பா வந்தாய்?" என்று ராகவன் கேட்டான்.

இதனால் சீதாவின் மனக் கஷ்டம் மேலும் அதிகமாயிற்று.

நல்ல வேளையாக அந்தச் சமயம் காமாட்சி அம்மாள் அவர்களுடைய பேச்சில் தலையிட்டாள்.

"வழி நெடுகச் சூரியாதான் எங்களுக்கு ஒத்தாசையாயிருந்து வந்தான். அவன் வந்திராவிட்டால் ரொம்பக் கஷ்டமாய்ப் போயிருக்கும்" என்றாள்.

"ஓகோ! இந்த வண்டியிலேயே இவனும் வந்தானா, என்ன? இறங்குகிறபோது நான் பார்க்கவில்லையே?" என்றான் ராகவன்.

"இல்லை, மாப்பிள்ளை ஸார்! நான் மூன்றாம் வகுப்பு வண்டியில் வந்தேன். அப்படி ஒன்றும் இவர்களுக்கு நான் பிரமாதமான ஒத்தாசை செய்துவிடவில்லை!" என்றான் சூரியா.

"அதனால் பாதகமில்லை. ஆனால் என்னை மட்டும் 'மாப்பிள்ளை ஸார்' என்று கூப்பிடாமல் விட்டால் சரி. கொஞ்சம் அநாகரிகமாய்த் தோன்றுகிறது!" என்றான் ராகவன்.

இதற்குள் போர்ட்டர்களின் தலையில் சாமான்கள் ஏறிவிட்டன. ராகவன் கையிலிருந்த குழந்தையைக் காமாட்சி அம்மாள் வாங்கிக் கொண்டாள். ராகவன் முன்னால் செல்ல மற்றவர்கள் பின் தொடர்ந்தார்கள்.

* * *

"இது தானா நமக்கு வாங்கியிருக்கிற மோட்டார் கார்?" என்று சீதா கேட்டாள். அவளுடைய குரலில் குதூகலம் தொனித்தது.

அதற்கு ராகவன் பதில் சொல்லவில்லை. சாமான்களைக் காரில் ஏற்றியானதும் காமாட்சியம்மாளையும் சீதாவையும் குழந்தையுடன் பின் ஸீட்டில் உட்காரச் செய்தான். தான் முன்புறத்தில் டிரைவருடைய ஸீட்டில் உட்கார்ந்து கொண்டான்.

அவனுக்குப் பக்கத்து ஸீட் காலியாகத்தானிருந்தது. சூரியா விடை பெற்றுக் கொள்வதற்காக நின்றான். காலி இடத்தில் சூரியாவை ஏறிக் கொள்ளச் சொன்னால் என்ன என்று சீதாவுக்குத் தோன்றியது. ராகவன் சொல்வான் என்று எதிர்பார்த்தாள். அவன் சொல்லவில்லை.

சீதா ஏமாற்றத்துடன் சூரியாவைப் பார்த்தாள். அவளுடைய மனோநிலையைத் தெரிந்து கொண்ட சூரியா முகபாவத்தினால் தன் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டான்.

வண்டி புறப்படலாயிற்று. சீதா மெல்லிய குரலில், "அம்மா! சூரியா உங்களுடன் சொல்லிக் கொள்கிறான் போலிருக்கிறது!" என்றாள்.

காமாட்சி அம்மாள், "ஏண்டாப்பா, சூரியா! போய் வருகிறாயா? ஊருக்குப் போவதற்குள்ளே ஒரு நாளைக்கு ஆத்துக்கு வந்து விட்டுப் போ!" என்று சொன்னாள்.

சீதாவுக்கு மாமியாரிடம் நன்றி உணர்ச்சி பொங்கியது.

சூரியா, "ஆகட்டும், மாமி! அவசியம் வந்துவிட்டுப் போகிறேன். மாப்பிள்ளை, சார்! உங்களுடைய விலாசம் என்ன?" என்று கேட்டான்.

ராகவனுடைய குணம் ஒருவாறு சூரியாவுக்கு ஏற்கெனவே தெரிந்து தானிருந்தது. அதற்காக அத்தங்காளின் உறவை விட்டு விடுவதாக அவனுக்கு உத்தேசம் இல்லை. மாப்பிள்ளை தன்னை அழைக்கா விட்டாலும் அவர்களுடைய ஜாகையில் போய்ப் பார்த்து விடுகிறது என்று தீர்மானித் திருந்தான்.

"நம்பர் எட்டு, நாதிர்ஷா ஸ்ட்ரீட்!" என்று சொல்லி விட்டு ராகவன் மோட்டாரை விட்டான்.

மோட்டார் போகத் தொடங்கியதும் சீதா மறுபடியும் உற்சாகம் கொண்டாள். "வஸந்தி! பார்த்தாயா? அப்பா மோட்டார் ஓட்டுகிறார்!" என்றாள்.

"நானும் மோத்தார் ஓத்துவேன்!" என்றாள் வஸந்தி.

சீதா கலகல வென்று சிரித்தாள். "கேட்டீர்களா, அம்மா, உங்கள் பேத்தியின் பேச்சை! இவளும் கார் ஓட்டுவாளாமே?" என்றாள்.

"ஓட்டினாலும் ஓட்டுவாள். இவள் பெரியவளாகும் போது உலகத்திலே இன்னும் என்னவெல்லாம் அதிசயம் நடக்கப் போகிறதோ?" என்றாள் காமாட்சி அம்மாள்.

ராகவன் அப்போது பேச்சில் தலையிட்டு, "அம்மா! பொம்மனாட்டிகள் கார் ஓட்டுகிறது வரப் போகிற அதிசயம் இல்லை! இப்போதே எத்தனையோ ஸ்திரீகள் கார் ஓட்டுகிறார்கள். அதனால் வீதிகளில் ஒரே அபாயமாய்ப் போய் விட்டது. பெண் பிள்ளை ஓட்டுகிற மோட்டார் கார் வருகிறது என்றால், வீதி உடனே காலியாகி விடுகிறது! ஜனங்கள் அப்படிப் பயந்து நாலாபுறமும் ஓடி ஒதுங்குகிறார்கள்!" என்று சொன்னான்.

ராகவனுடைய நகைச் சுவையை ரஸித்துச் சீதா சிரித்தாள். பழைய அனுபவத்திலிருந்து, ராகவனுடைய ஹாஸ்யத்தைப் புரிந்து கொண்டு சிரிக்கா விட்டால் அவனுக்குக் கோபம் வரும் என்பதைச் சீதா அறிந்திருந்தாள். ஏதாவது புரியா விட்டால் ராகவன் விளக்கிச் சொல்ல மாட்டான். "உன்னிடம் வந்து சொல்லப் போனேனா?" என்று முடித்துவிடுவான். இதனால் அவன் பேச்சைப் புரிந்தாலும் புரியா விட்டாலும் சீதா சமயோசிதம் பார்த்துச் சிரித்துவிடுவது வழக்கம்.

சீதாவின் சிரிப்பு நிற்பதற்குள் 'டர்ர்ர்ர்' என்ற சத்தத்துடன் கார் நின்றது. ராகவன் சட்டென்று பிரேக் போட்டு வண்டியை நிறுத்தினான். வயதான முஸ்லிம் ஸ்திரீ ஒருத்தி உயிர் தப்பினாள். இன்னும் அரை அங்குலம் வண்டி நகர்ந்திருந்தால் அந்த முஸ்லிம் ஸ்திரீயின் பேரில் மோதி அவளைக் கீழே தள்ளியிருக்கும்.

முதலில் காமாட்சி அம்மாளுக்கும் சீதாவுக்கும் விஷயம் இன்னதென்று தெரியவில்லை. தெரிந்து கொண்டதும் அவர்களுக்கு அடிவயிற்றில் நெருப்புச் சுட்டது போலிருந்தது.

"ஏம்மா, மோத்தார் நின்னுத்தது?" என்று கேட்டாள் வஸந்தி.

மறுபடியும் கார் போக ஆரம்பித்ததும் காமாட்சி அம்மாள், "ஏண்டாப்பா ராகவா! மோட்டார் ஓட்டுவதற்கு டிரைவர் வைத்துக் கொள்ளவில்லையா? நீயே எதற்காக ஓட்ட வேண்டும்?" என்றாள்.

"டிரைவர் வைத்துக் கொண்டால், சம்பளம் கொடுக்க வேணுமே? மாதா மாதம் பணத்துக்கு எங்கே போகிறது, அம்மா! இந்த ஊரிலே டிரைவர்களுக்கு ரொம்பக் கிராக்கி!" என்றான் ராகவன்.

அப்போது சௌந்தர ராகவனுக்கு மாதம் ரூபாய் ஆயிரத்து இருநூறு சம்பளம் என்பது அவன் தாயார், மனைவி இருவருக்கும் தெரியும். ஆகையால், 'பணத்துக்கு எங்கே போகிறது?' என்று அவன் கேட்டது பரிகாசத்துக்காக என்றே நினைத்தார்கள். சீதா சிரித்தாள்.

"எதற்காகச் சிரிக்கிறாய்? நான் சொல்கிறது வேடிக்கை என்று நினைத்தாயா?" என்றான் ராகவன்.

"ஆமாம்!" என்றாள் சீதா.

"எதனால் வேடிக்கை என்று உனக்குத் தோன்றுகிறது?" என்று ராகவன் கேட்டான்.

"மாதம் ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் வருகிறது; டிரைவருக்குக்

கொடுக்கப் பணம் இல்லையென்றால் யாராவது நம்புவார்களா? உங்கள் செல்வக் குமாரி வஸந்தி கூட நம்ப மாட்டாளே?" என்றாள் சீதா.

"பெண்ணையும் உன்னைப் போலவே வளர்த்துக் கொண்டு வருகிறாயாக்கும்!" என்றான் ராகவன்.

அதற்கும் சீதா சிரித்துக்கொண்டே "என் மாதிரி வளர்க்காமல் வேறு யார் மாதிரி வளர்க்க வேண்டுமாம்?" என்று கேட்டாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ராகவன் ஓட்டிய கார் தனக்கு ஹிந்து முஸ்லிம் வேற்றுமைப் புத்தி கிடையாது என்று நிரூபித்தது. இப்போது ஒரு ஹிந்து ஸ்திரீ மீது அது ஏறப் பார்த்தது! நல்ல வேளையாக, ஏறிவிட வில்லை.

"ஏண்டாப்பா, ராகவா! இன்னும் மோட்டார் நன்றாய் விடுவதற்கு நீ கற்றுக் கொள்ளவில்லை போலிருக்கிறதே! அதற்குள்ளே என்ன அவசரம்? நன்றாய்க் கற்றுக்கொள்ளுகிற வரையிலாவது டிரைவர் வைத்துக் கொள்ளக் கூடாதா?" என்றாள் காமாட்சியம்மாள். உண்மையான கவலையுடன் அவ்விதம் சொன்னாள்.

"எனக்கு நன்றாய் மோட்டார் விடத் தெரியும், அம்மா! ஆனால் இன்றைக்கு மனது கொஞ்சம் குழம்பியிருக்கிறது. அதனால்......"

"இன்றைக்கு மனது எதற்காகக் குழம்ப வேண்டும்?"

"செத்துப் போனதாக நாம் நினைத்துக்கொண்டிருந்த ஒருவர் திடீரென்று உயிரோடு வந்து நின்றால், மனக் குழப்பம் ஏற்படாதா, அம்மா? அதிலும், தான் தானில்லை என்று சாதிக்கப் பார்த்தால்?......"

"என்ன சொல்கிறாய், ராகவா! எனக்கு அப்படி ஒன்றும் உடம்பு அதிகமில்லையே? நாலு நாளைக்கு இன்புளுயன்ஸா சுரமாயிருந்தது! அவ்வளவுதானே? ஏண்டி சீதா! நீ ஏதாவது எனக்கு உடம்பு ரொம்ப அதிகமாயிருந்தது என்று கடிதம் எழுதி விட்டாயோ!"

"இல்லையே, அம்மா! உங்களுடைய உடம்பைப் பற்றி நான் எழுதவேயில்லையே?" என்றாள் சீதா.

"நானும் உங்களைச் சொல்லவில்லை, அம்மா! உங்களுக்கு உடம்பு அசௌக்கியமாயிருந்த விஷயமே எனக்கு இதுவரைக்கும் தெரியாது. வேறொருவரைப் பற்றிச் சொன்னேன்."

"அப்படி யார் செத்துப் பிழைத்து உயிரோடு வந்தது?"

"ரயில்வே ஸ்டேஷனிலே நீங்கள் பார்க்கவில்லையா?"

"நான் பார்க்கவில்லையே? எந்த ரயில்வே ஸ்டேஷனில்?"

"டில்லி ஸ்டேஷனில்தான். உங்கள் வண்டி வந்து நின்றதும் எதிர்ப்புறத்தில் ஒரு வண்டி புறப்பட்டது. அதிலே பார்க்கவில்லையா?"

"நான் ஒன்றும் பார்க்கவில்லை. அதில் யார் போனது?"

"அப்புறம் சொல்கிறேன், அம்மா!" என்றான் ராகவன்.

காமாட்சி அம்மாள் எதிர்ப் புறத்து ரயிலைப் பார்க்கவில்லைதான்; ஆனால் சீதா பார்த்துக் கொண்டிருந்தாள். ராகவன் ஓடிப் போய் யாரோ ஒருத்தியிடம் இரண்டு வார்த்தை பேசியதையும், அதற்குள்ளே வண்டி போய் விட்டதையும், ராகவன் ஒரு மாதிரி முகத்துடன் திரும்பி வந்ததையும் சீதா பார்த்துத் தன் மனதில் பதிய வைத்துக் கொண்டிருந்தாள்.

"அந்த ரயிலில் போனது யார் என்று கேளுங்கள், அம்மா!" என்று மாமியாரைத் தூண்டினாள்.

இதற்குள் மூன்றாவது தடவையாக மோட்டார் வண்டி நின்றது. சடக்கென்று நின்றபடியால் மறுபடியும் மாமியாருக்கும் மருமகளுக்கும் பயம் உண்டாயிற்று.

"என்ன? என்ன?" என்றார்கள்.

"ஒன்றும் இல்லை; வீடு வந்து விட்டது!" என்றான் ராகவன்.

சீதா வீட்டைப் பார்த்தாள். அழகான சின்னஞ் சிறு பங்களா. முன்புறத்திலும் இரு பக்கங்களிலும் பூஞ்செடிகள்; இளமரங்கள். சீதாவின் உள்ளத்தில் இன்பம் பொங்கித் ததும்பியது. "வஸந்தி! உன் வீட்டைப் பாரடி! எவ்வளவு அழகாயிருக்கிறது?" என்றாள்.

"இது அப்பா கத்திய வீதா, அம்மா? நம்பளுக்காகக் கத்தியிருக்காளா?" என்றாள் வஸந்தி.

மூன்றும் அத்தியாயம்

# துயரத்தின் வித்து

கலியாணம் நடந்த உடனேயே செளந்தரராகவன் சீதாவைத் தன்னுடன் புதுடில்லிக்கு அழைத்துப் போனான். இங்கிலீஷ் ஹோட்டல் ஒன்றில் தாற்காலிகமாக அவர்கள் தங்கினார்கள். ஒரு மாதகாலம் கந்தர்வ லோகத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

புதுடில்லியின் அழகழகான சாலைகளிலும் சதுக்கங்களிலும் பழைய டில்லியின் இடிந்த கோட்டைகளிலும் இடியாத அரண்மனைகள்—மசூதிகளிலும் அவர்கள் கைகோத்துக் கொண்டு உலாவி வந்தார்கள். இம்மாதிரி சில வருஷங்களுக்கு முன்னால் இன்னொரு பெண்ணுடன் கைகோத்துக் கொண்டு இதே இடங்களில் உலாவியது பற்றி ராகவனுக்கு அவ்வப்போது நினைவு வருவதுண்டு. ஆனால் அந்த நினைவை அலட்சியமாக உதறி எறிந்துவிட்டுப் பக்கத்தில் நின்ற தன் தர்மபத்தினி சீதாவின் கரத்தை ராகவன் கெட்டியாகப் பிடித்துக் கொள்வான்.

பிறகு ராகவன் இங்கிலாந்துக்கு அவசரமாகப் புறப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதன்பேரில் சீதாவைச் சென்னைக்கு அழைத்து வந்து தன் பெற்றோர்களிடம் விட்டான். தானும் சிலநாள் தங்கியிருந்து, சீதாவுக்கு ஆயிரம் விதமாகத் தேறுதல் கூறினான். அச்சமயம் சீமைக்குப் போவதால் தன்னுடைய உத்தியோக வாழ்க்கைக்கு ரொம்ப அநுகூலம் ஏற்படும் என்றும், அப்படிப்பட்ட அருமையான சந்தர்ப்பம் மறுபடி கிடைப்பது அரிது என்றும், அதை நழுவ விடுதல் மிக்க அறிவீனமாகும் என்றும் எடுத்துச் சொன்னான். மனதாரத் தெரிந்தெடுத்து ஆசையுடன் மணந்துகொண்ட மனைவியை அவ்வளவு சீக்கிரம் பிரிந்து செல்வதில் தனக்கு மட்டும் வருத்தமில்லையா என்று கேட்டான். வாழ்க்கையில் தன்னுடைய முன்னேற்றத்துக்கு அவள் குறுக்கே நிற்கலாமா என்றான். தான் அடுத்த தடவை வெளிநாட்டுக்குப் பிரயாணமாகும்போது அவளையும் அவசியம் அழைத்துப் போவதாக உறுதிமொழி கூறினான்.

சீதாவுக்கு ஒரு பக்கத்தில் தன்னுடைய இதய நாயகனை இவ்வளவு சீக்கிரத்தில் பிரியவேண்டியிருக்கிறதே என்று துக்கம் துக்கமாய் வந்தது. இன்னொரு பக்கத்தில் ராகவன் சீமைக்குப் போவது பற்றிப் பெருமையாகவும் இருந்தது. அழுது கொண்டே சிரித்தாள்; சிரித்துக் கொண்டே அழுதாள். ஒரு நிமிஷம் "போகவே கூடாது!" என்று பிடிவாதம் பிடித்தாள். அடுத்த நிமிஷம் "கட்டாயம் போகவேண்டும்" என்று வற்புறுத்தினாள். கடைசியாக, செளந்தரராகவன் போய்வருவதற்கு விடை கொடுத்து அனுப்பினாள்.

ராகவன் திரும்பி வருவதற்குப் பதினைந்து மாதத்துக்கு மேலாயிற்று. அதற்குள் சீதாவின் வாழ்க்கையில் பல முக்கிய நிகழ்ச்சிகள் நேர்ந்தன. அவளுடைய அருமைத் தாயார் பம்பாய் ராஜம்மாள் தன் ஒரே மகளுக்கு நல்ல இடத்தில் மணம் செய்து கொடுத்தோம் என்ற மனத்திருப்தியுடன் இந்த மண்ணுலகை நீத்துச் சென்றாள். தன்னுடைய புருஷர் துரைசாமி அய்யரின் மடியின்மீது தலையை வைத்துக் கொண்டு கடைசி மூச்சை விடும் பாக்கியம் அவளுக்குக் கிடைத்தது. அதோடு அவள் பெரிதும் ஆசை வைத்திருந்த அகண்ட காவேரிக் கரையில் அவளுடைய உடல் தகனமாகும் பேறும் கிடைத்தது.

தாயார் இறந்து பல தினங்கள் வரையில் சீதா கண்ணீரும் கம்பலையுமாயிருந்தாள். மாமியார் எத்தனை ஆறுதல் சொல்லியும் அவளுடைய துக்கம் தீரவில்லை. மாமனார் பகவத் கீதையிலிருந்து எவ்வளவு சுலோகங்கள் சொல்லி வியாக்யானம் செய்து காட்டியும் அவளுடைய மனம் நிம்மதியடையவில்லை. இப்பேர்ப்பட்ட துக்கம் தனக்கு நேர்ந்த சமயத்தில் தன் அருமைக் கணவன் பக்கத்தில் இல்

லாமற் போனது அவளுடைய துயரத்தை அதிகமாக்கியது.

உண்மையான அன்பு, சிநேகம் இவற்றின் பெருமையே அதுதான் அல்லவா? அன்புடையவர்களிடமும் சிநேகிதர்களிடமும் துக்கத்தைப் பகிர்ந்துகொண்டால் துக்கம் குறைந்து சீக்கிரத்திலேயே மனச் சாந்தி ஏற்படுகிறது. அன்புள்ளாரிடம் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டால் அந்தச் சந்தோஷம் பொங்கிப் பெருகுகிறது.

சீதாவுக்கு நேர்ந்த பெருந்துக்கத்தை அவளுடன் பகிர்ந்து கொள்ளச் சௌந்தரராகவன் அருகில் இல்லை. இதனால் அவளுடைய துக்கம் வெகு காலம் நீடித்திருந்தது.

சீதாவின் வாழ்க்கையின் இன்னொரு முக்கிய சம்பவம்,—மிகவும் சந்தோஷமான சம்பவம்—நேர்ந்த பிறகுதான் அந்தத் துக்கம் மறைந்தது.

தன் உயிருக்கே நேர்ந்த அபாயத்திலிருந்து சீதா கடவுள் அருளால் பிழைத்து எழுந்து தான் பெற்ற செல்வக் கண்மணியைப் பார்த்தபிறகு மற்றதெல்லாம் அவளுக்கு மறந்தே போய்விட்டது. தாயாரை நினைத்துக் கொண்டு துக்கப்படுவதற்கு இனிமேல் அவளுக்கு நேரம் ஏது? இதோடு கூட, காமாட்சி அம்மாளும், மற்றும் அக்கம் பக்கத்து மூதாட்டிகளும், "உன் அம்மாவே உன் வயிற்றில் பெண்ணாய் வந்து பிறந்து விட்டாள்!" என்று அடிக்கடி சொன்னதனால் சீதாவுக்கும் அத்தகைய நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தன் குழந்தையின் முகத்தைப் பார்ப்பதில் உண்டான ஆனந்தத்தில் தன்னைப் பெற்ற தாயின் முகத்தை மறந்தாள். சீமைக்குப் போயிருக்கும் கணவன் திரும்பி வந்ததும் குழந்தையை அவரிடம் காட்டி ஆச்சரியக் கடலில் மூழ்கச் செய்யும் நேரத்தை எண்ணி எண்ணி உள்ளமும் உடலும் பூரித்தாள்.

சீமைக்குப் பயணமாகும் போது ராகவன் சீதாவைக் கான்வெண்ட் ஸ்கூலுக்கு அனுப்பச் சொல்லிப் பெற்றோர்களிடம் ஏற்பாடு செய்துவிட்டுப் போனான். அதன்படி சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகவில்லை என்று அறிந்ததும் அவன் மிக்க கோபங் கொண்டு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்துக்குப் பதிலாக அவனுடைய தகப்பனார், "உன்னுடைய சீமந்தக் கலியாணத்துக்கு அடுத்த மாதம் முகூர்த்தம் வைத்திருக்கிறது. உடனே புறப்பட்டு வந்து சேரவும்" என்று எழுதினார். சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகாத காரணம் இப்போது ராகவனுக்குப் புலனாயிற்று. அதனால் அவன் சந்தோஷமடைந்தானா, அதிருப்தி கொண்டானா என்று சொல்ல முடியாது. பதில் கடிதத்தில் பரிகாசமாக, "சீமந்தக் கலியாணத்தை ஆறு மாதம் தள்ளி வைத்துக் கொள்ளவும்; தள்ளி வைக்க முடியாவிட்டால் பார்த்தி வைத்து நடத்தி விடவும்!" என்று எழுதியிருந்தான். சீதாவுக்கு இந்தக் கடிதம் அளவில்லாத கோபத்தை அளித்தது. ராகவனுடைய கடிதங்களை விலைமதிப்பில்லாத பொக்கிஷத்தைப் போல் போற்றிப் பத்திரப்படுத்தும் வழக்கமுடைய சீதா மேற்படி கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தாள். ராகவன் அவ்வாறு பரிகாசமாக எழுதியது பற்றி மாமியாரிடம் புகாரும் சொன்னாள்.

மாமியாரும் மருமகளும் வெகு ஒற்றுமையாகவும் அன்யோன்யமாகவும் இருந்து வந்தார்கள். "மருமகள் மெச்சிய மாமியார் இல்லை" என்னும் பழமொழி அவர்கள் விஷயத்தில் பொய்யாயிற்று. "அம்மா! உங்களிடம் இருந்து குடித்தனம் செய்ய முடியாதென்று என் 'ஓர்ப்படி' பிறந்த வீட்டோடு போய் விட்டாளாமே? அவள் எவ்வளவு பெரிய ராட்சஸியாயிருக்க வேண்டும்?" என்றாள். அக்கம் பக்கத்து வீடுகளில் தன் மாமியார் தன்னை அன்புடன் நடத்துவது பற்றிப் பெருமையுடன் சொல்லிக் கொண்டாள். காமாட்சியம்மாளின் மனோரதம் நிறைவேறி விட்டது. அந்த அம்மாள் பத்மாபுரத்தின் வீதிகளில் கம்பீரமாகப் பெருமிதத்துடன் தலை நிமிர்ந்து நடக்கத் தொடங்கினாள்.

சௌந்தரராகவன் சீமையிலிருந்து திரும்பி வந்தான். வஸந்தியைப் பார்த்து அகமகிழ்ந்து முகமலர்ந்தான். சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகாததினால் ஏற்பட்ட கோபத்தையும் மறந்தான். புது டில்லியில்

ஜாகை கிடைத்ததும் கடிதம் எழுதி அவர்களைத் தருவித்துக் கொள்வதாகச் சொல்லி விட்டுப் போனான். நல்ல ஜாகை கிடைப்பதற்கு இத்தனை காலம் ஆகிவிட்டது.

* * *

சீதா புது டில்லிக்கு வந்து சேர்ந்து ஒரு வாரம் ஆயிற்று. அந்த ஏழு நாளும் புது ஜாகை போடும் ஏற்பாடுகளில் எல்லாரும் முனைந்திருந்தார்கள். இந்த நாற்காலியை எடுத்து அந்த அறையில் போடுவது, அந்த அலமாரியைத் தூக்கி இந்த அறைக்குக் கொண்டு வருவது, கட்டில்களை மாற்றி மாற்றிப் போடுவது, சமையல் வேலைகளுக்கு ஏற்பாடு செய்வது, அம்மிக் குழவியும் கல் உரலும் சம்பாதிப்பது, கிராமபோனும் ரேடியோவும் வைப்பது ஆகிய காரியங்களில் சதா ஈடுபட்டிருந்தார்கள். சாயங்காலம் வந்ததும் சீதா முன் போல், — அதாவது கலியாணம் ஆனவுடனே வந்திருந்த நாட்களிலே போல் — ராகவனுடன் வெளியில் உலாவச் செல்ல வேண்டுமென்று ஆசைப்படுவாள். காரியம் அதிகமாக இருந்தபடியால் அந்த ஆசையை அடக்கிக் கொண்டாள்.

ஒரு வாரத்திற்குப் பிறகு ஒரு நாள் காலை ராகவனைப் பார்த்து, "இன்று சாயங்காலம் சீக்கிரம் ஆபீஸிலிருந்து வந்துவிடுங்கள்; வெளியில் எங்கேயாவது அழைத்துப் போங்கள்!" என்றாள் சீதா.

"நான் அழைத்துப் போவது என்ன? உனக்கு இஷ்டமான போது இஷ்டமான இடத்துக்குப் போய் வருவது தானே?" என்றான் ராகவன்.

"அழகாயிருக்கிறது; நான் மட்டும் தனியாகப் போவதாக்கும்?"

"போனால் என்ன? உன்னை யாராவது வழிப்பறி செய்து கொண்டு போய் விடுவார்களா? இங்கே இன்னும் பிரிட்டிஷ் ராஜ்யம் நடக்கிறது; காங்கிரஸ் ராஜ்யம் பூராவும் வந்து விடவில்லை?" என்றான் ராகவன்.

"என்னை ஒருவரும் கொண்டு போய் விடமாட்டார்கள்; வாஸ்தவந்தான். ஆனாலும் தனியாய்ப் போவதாயிருந்தால் நான் போகவேயில்லை."

"தனியாய்ப் போக வேண்டாம்; உன் மாமியாரையும் கூட அழைத்துக் கொண்டு போயேன்?"

"மாமியாரைக் கூட அழைத்துக் கொண்டு போக உங்களுடைய அநுமதி வேண்டுமாக்கும்!" என்று சீதா பொய்க் கோபம் வருவித்துக் கொண்டு சொன்னாள்.

"சரி; சரி! கோபித்துக் கொள்ளாதே! இன்று சாயங்காலம் சீக்கிரம் வந்து உன்னை 'வாக்கிங்'குக்கு அழைத்துப் போகிறேன்!" என்று சொல்லி விட்டு ராகவன் சென்றான்.

அவ்விதமே அன்று மாலை சீக்கிரமாக ராகவன் திரும்பி வந்தான். சீதாவைப் பார்த்து "மோட்டாரில் 'வாக்கிங்' போகலாமா? நடந்து போகலாமா?" என்று கேட்டான்.

வழக்கப்படி சீதா ராகவனுடைய ஹாஸ்யத்துக்காகச் சிரித்து விட்டு, "மோட்டாரில் 'வாக்கிங்' எப்படிப் போவது? நடந்தே போகலாம்!" என்றாள்.

சாமாட்சியம்மாள் தான் 'வாக்கிங்' வரவில்லையென்றும் குழந்தையைப் பார்த்துக் கொள்வதாகவும் கூறினாள். சீதா விரும்பியதும் இதுதான். ஆகையால் ராகவனுடன் உல்லாசமாகக் கிளம்பினாள். இருவரும் கன்னாட் சர்க்கிளுக்கு வந்து ஒரு தடவை சுற்றிப் பார்த்து விட்டு 'இந்தியா கேட்'டை நோக்கிச் சென்றார்கள்.

இந்தியா கேட்டுக்குப் பக்கத்தில் உள்ள செயற்கை நீர் ஓடைகளில் ஒன்றுக்கு அருகில் பச்சைப் பசும்புல் தரையில் உட்கார்ந்தார்கள். அப்போது சூரியன் அஸ்தமித்து இருள் சூழ்ந்துவரும் சமயம். நாலு திசைகளிலும் வரிசை வரிசையாக வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக் கொண்டு இந்தியத் தலைநகரின் மின்சார தீபங்கள் பிரகாசித்தன.

"கந்தர்வலோகம், கந்தர்வலோகம் என்று சொல்கிறார்களே! அந்தக் கந்தர்வலோகம் இதைவிடவா அழகாயிருக்கும்?" என்றாள் சீதா.

"நான் கந்தர்வ லோகத்துக்குப் போனதில்லை: அதனால் இரண்டையும்

ஒப்பிட்டுச் சொல்லத் தெரியவில்லை" என்றான் ராகவன்.

சீதா சிரித்துக் கொண்டே "நானும் கந்தர்வ லோகத்துக்குப் போனதில்லை; ஆனால் கந்தர்வ லோகத்தைப் பற்றிப் பாரதியார் 'ஞான ரதம்' என்ற புத்தகத்தில் வர்ணித்திருப்பதைப் படித்திருக்கிறேன். புதுடில்லியை விடக் கந்தர்வ லோகம் அவ்வளவு ஒன்றும் ஓசத்தியில்லை யென்று எனக்குத் தோன்றுகிறது!" என்றாள்.

"நான் 'ஞானரத'த்திலும் ஏறின தில்லை: அதனால் அபிப்பிராயம் சொல்ல முடியாது" என்றான்.

"ஞானரதம் வெறும் கற்பனை ரதம். நீங்கள் வான ரதத்தில் ஏறி ஆகாசத்தில் பறந்திருக்கிறீர்கள். ஞான ரதத்தைப் போல் கந்தர்வ லோகமும் கற்பனை லோகந்தான். நீங்களோ லண்டன், பாரிஸ் முதலிய உண்மை நகரங்களுக் கெல்லாம் போயிருக்கிறீர்கள். ஏன்னா? புதுடில்லியைவிட லண்டனும் பாரிஸும் அழகுதானே?" என்று சீதா கேட்டாள்.

"'ஏன்னா' என்று இனிமேல் என்னை அழைப்பதில்லை யென்று நீ சபதம் செய்தால் உன் கேள்விக்குப் பதில் சொல்கிறேன்" என்றான் ராகவன்.

"ஆகட்டும்; இனிமேல் 'ஏன்னா' என்கவில்லை. 'ஏன் ஸார்?' என்கிறேன். லண்டன் அழகா, டில்லி அழகா? ஏன், ஸார்?" என்றாள் சீதா.

"லண்டன் ஒரு விதத்தில் அழகு; டில்லி இன்னொரு விதத்தில் அழகு" என்றான் ராகவன்.

சீதாவுடன் பேசிக் கொண்டிருந்த போது ராகவனுடைய கண்கள் அங்குமிங்கும் சுழன்று பார்த்துக் கொண்டிருந்தன. ஒரு சமயம் சாலையோடு இரண்டு பெண்கள் நடந்து போனார்கள். சாய்ந்து படுத்திருந்த ராகவன் சட்டென்று எழுந்து உட்கார்ந்து அவர்களை உற்றுப் பார்த்தான். மறுபடியும் புல் தரையில் சாய்ந்து கொண்டான்.

டில்லி ரயில்வே ஸ்டேஷனில் நடந்த சம்பவம் சீதாவுக்கு ஞாபகம் வந்தது.

"ஏன் ஸார்! அன்றைக்கு ரயில்வே ஸ்டேஷனில் யாரோ ஒருத்தியை பார்த்துப் பேசினீர்களே? அவள் யார்?" என்று சீதா கேட்டாள்.

"அவள் யாரா யிருந்தால் உனக் கென்ன?" என்று ராகவன் கேட்ட குரலில் கடுமை தொனித்தது.

"யார் என்று சொன்னால் என்ன?"

"சொல்ல முடியாது."

"ஏன் சொல்ல முடியாது?"

"எனக்கு இந்த ஊரில் எத்தனையோ பேரைத் தெரியும்! அவர்களை யெல்லாம் யார் யார் என்று உனக்குச் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா?"

"உங்களுக்குத் தெரிந்துள்ளவர்களை யெல்லாம் எனக்கும் தெரிந்திருக்க வேண்டியதுதானே? என்னிடம் சொன்னால் என்ன வந்துவிடும்?"

"உனக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் தெரிந்தால் போதும். ஊரில் உள்ளவர்களை யெல்லாம் தெரிந்திருக்க வேண்டியதில்லை."

பொங்கி வந்த கோபத்தைச் சீதா அடக்கிக் கொண்டாள்.

சற்று நேரம் இருவரும் மௌனமா யிருந்தார்கள்.

"ஏன் ஸார்? அவள் யார் என்று சொல்ல மாட்டீர்களா?"

மௌனம்.

"அவள் உங்களோடு காலேஜில் படித்தவளா?"

மௌனம்.

"நம்ம பக்கத்து மனுஷியா? இந்த ஊர்க்காரியா?"

மௌனம்.

"என்னோடு ஏன் பேசப் போகிறீர்கள்? இதற்குத் தான் அருமையாக 'வாக்கிங்' அழைத்து வந்தீர்களாக்கும்?" என்று கூறிய சீதாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது.

"இதற்குத்தான் அழைத்து வர மாட்டேன் என்று சொன்னேன். பெண்களின் சுபாவத்தைக் காட்ட ஆரம்பித்து விட்டாயல்லவா? சனியன்!" என்று சொல்லிக் கொண்டே ராகவன் பசும்புல் தரையிலிருந்து எழுந்தான்.

"நான் ஒன்றும் சனியன் இல்லை" என்று சீதா கூறி இன்னும் ஏதோ முணுமுணுத்தாள்.

சீதாவின் குற்றமற்ற இளம் உள்ளத்தில் துன்பத்தின் வித்து விதைத்தாகிவிட்டது. அது முளைத்து வளர்ந்து மரமாகி என்னென்ன பலன்களைத் தரப் போகிறதோ, யார் கண்டது!

# என்ன மாறுதல்?

ஸோமாஸ்

**மா**னேஜர் பராங்குசத்துக்குக் கனவிலும் நினைவிலும் ஆபீஸ் ஞாபகந்தான். அவர் எந்தக் காரியம் செய்தாலும் அதில் ஆபீஸ் காரியம் கலந்திருக்கும். சொந்தக்காரர்களுக்குக் கடிதம் எழுதினாலும் அவர் ஆபீஸ் பாணியில்தான் எழுதுவார்.

ஒரு சமயம் அவரது நெருங்கிய உறவினரிடமிருந்து விவாக முகூர்த்தப் பத்திரிகை வந்தது. விவாகத்துக்குப் பராங்குசத்தினால் போக முடியவில்லை. உடனே ஒரு கடிதம் எழுதினார்:

**நமஸ்காரம்.**

**தேதி, கடித எண் எதுவும் குறிப்பிடாமல் எழுதப்பட்டிருக்கும் தங்கள் கடிதம் கிடைத்தது. தங்கள் மைத்துனனுக்கு விவாகம் நடக்கப் போகும் விஷயத்தையும் அறிந்தோம். மகிழ்ச்சி. நேரில் வர இயலாதது பற்றி வருந்துவதுடன், புதுமணத் தம்பதிகளுக்கு எங்கள் வாழ்த்தையும் அனுப்பி வைக்கிறோம். வாழ்த்தைப் பெற்றுக் கொண்டதற்கு மறு தபாலில் பதில் எதிர்பார்க்கிறோம். பதில் கடிதத்தில் எங்கள் கடித எண் ஸி. தெ. 403 என்பதை மறவாமல் குறிப்பிட வேண்டும்.**

**இன்னும் வேண்டியவைகளுக்கு எங்கள் கம்பெனிக்கே எழுதினால், நீடித்த உழைப்பும், திருப்தியும் தரும் சாமான்களாக எங்களால் குறித்த காலத்தில் அனுப்பி வைக்க முடியும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

**இப்படிக்கு,**

**பராங்குசம்.**

இந்தமாதிரி, தம் கம்பெனிக் கடிதங்களுக்குப் பதில் எழுதும் தோரணையில் அந்த விவாக முகூர்த்தப் பத்திரிகைக்குப் பதில் எழுதினார் ஸ்ரீமான் பராங்குசம்.

பராங்குசத்தின் ஆபீஸ் ஞாபகத்தைப் பற்றி உதாரணம் காட்டுவதென்றால், கதை முழுவதும் உதாரணமயமாயிருக்கும். அவ்வளவு இருக்கிறது.

அல்லும் பகலும் அனவரதமும் அவர் ஆபீஸுக்கே உழைத்தார். அவர் 'உண்ணும் சோறு, தின்னும் வெற்றிலை, பருகும் நீர்' யாவும் ஆபீஸ் வளர்ச்சிக்காகத் தான். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்ரீ விவேகானந்தர், மார்க்க அரேலியர் முதலிய மகான்கள் அருள் மொழிகளை அருளிச் செய்திருக்கிறார்கள் அல்லவா? அதே மாதிரி பராங்குசமும் அருள்மொழியொன்று அருளியிருக்கிறார். "யான் விடும் மூச்சு ஆபீஸுக்காக; சிந்திக்கும் சிந்தனை ஆபீஸுக்காக; தூக்கம், சாப்பாடு, சிற்றுண்டி, யாவும் ஆபீஸுக்காக; பேசும் பேச்சு ஆபீஸுக்காக; எந்த ஒரு காரியத்தையும் நான் சொந்த நோக்கத்துடன் நோக்குவதுமில்லை; செய்வதுமில்லை. செய்யப் போவதும் இல்லை."



அந்தக் கம்பெனி ஆரம்பித்த புதிதில் டைப்பிஸ்டு பராங்குசம், டெலிபோன் குமாஸ்தா பராங்குசம், ஹெட் கிளார்க் பராங்குசம், ஏஜெண்டு பராங்குசம், மானேஜர் பராங்குசம், சைக்கிள் பையன் பராங்குசம் என்று ஒருவரே பல உருவம் தாங்கி அத்தனை பேருடைய வேலையையும் செய்து வந்தார். இன்னும் போதாக் குறைக்கு இரவில் ஆபீசிலேயே படுத்துத் தூங்கி 'வாச்சுமேன்' ஸ்தானத்தையும் பூர்த்தி செய்தார்.

இதெல்லாம் பூர்வ கதை. இப்போது அவர் மானேஜர் பராங்குசம் மட்டும்தான்; மற்ற ஸ்தானங்களுக்கெல்லாம் எத்தனையோ பேர் வந்துவிட்டனர். பராங்குசத்தின் சிலத்தினாலும், தியாகத்தினாலும், பொறுமையினாலும், நேர்மையினாலும் அவர் மட்டுமல்லாமல் அந்தக் கம்பெனியும் ரொம்பவும் முன்னணிக்கு வந்துவிட்டது. முன்பு எங்கேயோ ஒரு சந்துக்குள் அக்ஞாதவாசம் செய்துவந்த கம்பெனி, இப்பொழுது பெரிய ரஸ்தாவில் விண்ணை பிடிக்கும் மாடியுடன் கூடிய பெரிய கட்டிடத்தில் விளங்கியது.

இவ்வளவு இருந்தும் பராங்குசத்தின் மனதில் ஒரு கவலை இருந்து வந்தது. அது அவர் மனத்தைப் பெரிதும் பாதித்தது.

அந்தக் கம்பெனியில் வேலை செய்யும் ஒருவராவது நாகரிகமாக நல்ல உடை அணிந்து சுத்தமாக வருவதில்லை. இது தான் பராங்குசத்துக்குக் கவலை தந்த விஷயம். அந்த ஆபீஸில் வேலை செய்பவர்களுக்கு நல்ல சம்பளம் கொடுக்கப் பட்டு வந்தது. பஞ்சப்படி, போனஸ், லீவு வசதி முதலிய யாவும் அளிக்கப்பட்டிருந்தன. ஆயினும் ஏனோ அவர்களை நாகரிகமாக ஆபீஸுக்கு வரும்படி செய்ய முடியவில்லை.

சில சமயம் அந்தக் கம்பெனி குமாஸ்தாக்கள், நோய் வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியிலிருந்து விட்டு வந்தவர்கள் மாதிரி இளந்தாடியுடன் காட்சி யளிப்

பார்கள். நீண்ட நாளாகக் கிராப் வெட்டப் படாததனால், பின்புறம் சுருண்டு தொங்கும் கூந்தலுடன் சினிமாவில் தோன்றும் காதலர்களைப்போல் காட்சி யளிப்பார்கள் சிலர். கொஞ்சம் வயதான உத்தியோகஸ்தர்கள் வசிஷ்டர், வாமதேவர் மாதிரி நீண்ட தாடியுடன் விளங்குவார்கள்.

இந்த விநோதக் காட்சிகள் எல்லாம் பராங்குசத்தின் மனதில் சொல்லொணா வேதனையை உண்டு பண்ணின. பாவம்! கடைசியில் அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. பராங்குசத்துக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அந்த யோசனையைப் பற்றி மீண்டும் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தார்.

• • •

அன்று ஆபீஸ் மிகவும் சுறு சுறுப்புடன் விளங்கியது. மின்சார விசிறி கூடப் புதிய மிடுக்குடன் சுற்றியது. ஆபீஸ் பையன்கள் கூடக் கோட்டுப் பித்தான்களைப் பளபளவென்று மெருகிட்டுக் கொண்டு மிகவும் சுத்தமாக வந்திருந்தனர். குமாஸ்தாக்களெல்லாம் மிகவும் நாகரிகமாக உடையணிந்து கொண்டு வந்து சுறுசுறுப்பாகத் தங்கள் வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தனர்.

மானேஜர் பராங்குசத்தின் உடையே அன்றைய தினம் எப்போதும் இருப்பதை விடப் பிரமாதமா யிருந்தது. இதற்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா? பராங்குசத்தின் அற்புத யோசனைதான்!

அதாவது பராங்குசம் தம் காரியாலயத்தில் ஒரே ஒரு மாறுதல் செய்தார். அந்த மாறுதல் இவ்வளவு பிரமாதமான மாறுதலைக் காரியாலயக் குமாஸ்தாக்களிடையே செய்துவிட்டது. கேள்விக் குறி மாதிரி வளைந்து விகாரமா யிருந்த டெலிபோன் குமாஸ்தாவை வேறொரு இலாக்காவுக்கு மாற்றிவிட்டு, அந்த இடத்திற்கு வேறொருவரைப் புதிதாக நியமித்தார். அவர் பெயர் மிஸ் சுலோசனா!

அழகி சுலோசனா ஆபீஸுக்கு வரும்போது புன்னகையுடன் வித்தியாதரக் கன்னிகையைப் போல் வீதியில் மிதந்து வருவான்; ஆபீஸிலிருந்து வீட்டுக்குப் போகும்போது பட்டுப் பூச்சியைப்போல் பறந்து செல்வான். பராங்குசத்தின் மனக் கவலையைப் போக்கிய அந்தப் பாவையின் கடைக்கண் பார்வைக்கு முன்னால் ஆபீஸ் சிப்பந்திகளிடையே என்ன மாறுதல், என்ன மாறுதல்!



# வள்ளியின் கணவன்

கி. முத்துஸ்வாமி

அந்தத் தூங்குமூஞ்சி மரத்தின் நிழலில் தூங்கினபடியே செக்கு மாடுகள் ஊர்ந்து கொண்டிருந்தன. பழனி வேகமாகச் சென்று சாட்டையினால் தலைக்கு இரண்டு கொடுத்து விட்டுத் திரும்பவும் செக்கின் சமீபம் வந்தான். திடீரென்று அந்த உயர்ந்த ஜாதிக் காளைகள் ரோஷத்துடன் கிளம்பியபொழுது, பற்பல ஸ்தாயிகளில் செக்கு ராகம் பாட ஆரம்பித்தது. சற்றுத் தூரத்திலே நின்று கொண்டிருந்த வள்ளி தன்னையறியாமலே 'களுக்'கென்று நகைத்து விட்டாள்.

பழனி திரும்பினான். "என்ன, வள்ளியரசாணி! நீ இன்னுமா நிக்கிறே? இந்த வெய்யில் வேளையிலே நீ இப்படி செக்குமோட்டுலே வந்து நிக்கிறது நல்லா இருக்குதா?"

"த! இந்தமாதிரி 'அரசாணி, பினாச்சாணி' என்றெல்லாம் கூப்பிட்டாத் தெரியுமா?"

வள்ளி பொய்க் கோபத்துடன் மறுபுறம் திரும்பிக் கொண்டாள்.

"பின்னே எப்படித் தான் கூப்பிடுகிறது?"

"எப்படிக் கூப்பிடுகிறதா?"

அவள் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு தலை கவிழ்ந்து கொண்டாள். பின்னர் நிமிர்ந்து, "ஏன், நான் நிக்கிறது ஒனக்கு என்ன கஷ்டமா இருக்குது?" என்று கேட்டாள்.

"கஷ்டமாய்த்தான் இருக்கிறது, வள்ளி! நான்தான் வெய்யில்லே கிடந்து காய்கிறேன்; நீயும் வந்து ஏன் கஷ்டப் படணும்னு தான் கேட்கிறேன்? திடீர்னு இப்போ உன் முறைமைக்காரரு வந்தா......"

பழனி கிண்டலாக நகைத்தான்.

"த! இப்படியெல்லாம் பேசினாத் தெரியுமா சங்கதி? அவன் வந்தா என்ன? என் தலையைச் சீவிப்புடுவானோ?"

அவள் முகத்தில் சிறிதே கோபம் பிரதிபலித்தது.

"என்ன இருந்தாலும், அவன் உற முறையான்......"

பழனி அரை குறையாக நிறுத்திக் கொண்டான். அவனது பார்வை அவளுக்கே சற்று அச்சமாக இருந்தது!

"உறவு முறையை நீ ரொம்பக் கண்டுப் பிட்டேல்லை?"

வள்ளி இதைச் சொல்லிக் கொண்டே பள்ளத்தில் வைத்திருந்த எண்ணெய்க் குடத்தைக் கூடையுடன் தூக்கிக் கொண்டாள். பழனி பரபரப்புடன் கையிலிருந்த வட்டியைக் கீழே போட்டு விட்டு ஓடி வந்தான்.

"வள்ளி, வள்ளி! நீ ஏன் அதைத் தூக்குறே? கொஞ்சநேரம் கழிச்சு நானே எடுத்துக்கிட்டு வந்து வீட்டுக்குள்ளே வெச்சுட்டு வாரேன்; அதைப் பார்க்கிலும் எனக்கு என்ன வேலை? நான் வாங்குற சம்பளத்துக்கு வேலை செய்ய வாணும்?" என்று சொல்லிக்கொண்டே பழனி அதை வாங்கப் போனான்.

"நான் வேலை செய்யறத்தை நீ ஏன் தடுக்கிறே?"

"ஆமா! தூக்கத் தெரியாமத் தூக்கி சேலை வெல்லாம் அபிஷேகம் செய்துக்கப் போறியா, அரசாணி!—இல்லேல்லே வள்ளி?"

"பாத்தியா, பாத்தியா! மறுபடி வந்துட்டியே 'வல்லடி வழக்கு'க்கு! என்னை விடு, எனக்கு வேலை செய்யத்தான் பிரியம்."

வள்ளி சட்டெனத் திரும்பி உள்ளே சென்று விட்டாள். அவள் போன திக்கையே ஏமாற்றத்துடன் பார்த்துக் கொண்டு நின்றான் பழனி.

"ஊஹூம்! அவ்வளவு தூரத்துக்கு வந்துடிச்சா, ஒன் யாவாரம்?"

திருவேங்கடம் மீசையை முறுக்கிக் கொண்டபடியே இப்படிச் சொன்னதைப் பார்த்ததும், பழனி ஒரு கணம் ஸ்தம்பித்து நின்று விட்டான். திரும்பவும் செக்கடிப் பக்கம் அவன் வந்த போது, திருவேங்கடத்தின் ஆக்ரோஷம் நிறைந்த பார்வை அவனை எரித்து விடுவது போன்றிருந்தது.

கவலை நிறைந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தான் கிழ மருதை. ஏக்கமும், பயமும் அவன் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தன என்பதை அவனது பெருமூச்சுகள் உணர்த்திக் கொண்டிருந்தன. அப்பொழுதுதான் இரைந்து விட்டுப் போயிருந்த திருவேங்கடம் கிழவனது இதயத்தைக் கலக்கி விட்டிருந்தான்.

"நல்லாத்தான் இருக்குது விசயமெல்லாம், கொஞ்சம்கூட லச்சையில்லாமே!"

திடீரென்று இந்தக் குரலைக் கேட்டதும் கிழவன் திரும்பி, "என்ன, ராசு! உட்காரு!" என்றான். ஆயிரம் கவலைகளுக்கிடையே, அவனது தொனியில் காதலல் வியப்பும் பிரதிபலித்தது. ராசு உட்கார்ந்து கொண்டான்.

"நடந்த தெல்லாம் பார்த்தில்லே?" என்றான் கிழவன். அவனது விழிகள் மருட்சியுடன் நாலாபுறமும் சுற்றி விட்டுத் திரும்பின.

"என்னுதான் பணக்காசைப் படைப்பிச்சாத்தான் இன்னு, மனுசனுக்குக் கொஞ்சம் அடக்கம் வாணும்?"

ராசு உணர்ச்சி மிகுதியில் இரைந்து கத்தினான். கிழவன் சைகையினால் அவனது குரலை அடக்கி விட்டுச் சுற்றுமுற்றும் ஒரு முறை பார்த்துக் கொண்டான். பின்னர் சாவதானமாக, "தம்பி, இதிலே விஷயம் என்னன்னு, இந்தப் பய பழனி இருக்கிறான் பாரு, அவன் நம்ப வீட்டுக்கு வந்து வருசம் பத்தாச்சுது. அவன் மேலே ஏதனுச்சும் ஒரு குறை சொல்ல முடியுமா? அவன் மேலே இவனுக்கு என்ன? அவனோட யோக்கியதைக்கும், தன்மைக்கும் இந்தப் பய ஒறைபோடக் காணுவானு? சரி, என்னதான் உறவு, வளமொறை எல்லாம் இருக்கட்டும்; கண்ணு தெரிஞ்ச யாராலும் கேணியிலே விழுவாங்களா? இப்போ ஊரிலேயானு, 'திருவேங்கடம்' வருகிநக்கரத்துக்குள்ளார ரேயே ஓடி ஒளியறுங்க—இவன் யோக்கியதை இப்படி இருக்குது...ஹூம்......"

எதிரே பழனி வந்துகொண்டிருக்கவே, மருதை நீண்ட பெருமூச்சுடன் தன் வார்த்தையை நிறுத்திக் கொண்டான்.

பழனி கிட்டே நெருங்கி வந்தவுடன், "தம்பி, உன்னைத்தான் பார்க்கணும்னுட்டு இருக்கேன். காலைக்குச் சாயந்திரமா வேளை நல்லா இருக்குது; அந்தப் புதுச்செக்கை நட்டு முகூர்த்தம் செய்துடலாம்னு இருக்கிறேன். நான் முளையடிச்சு வெச்சிருக்கிற இடத்திலே, ஒரு ஆளை வெச்சுக்கிட்டு, எட்டு அல்லது ஒம்பதடி ஆழத்துக்கு......"

"அதெல்லாம் இந்தப் பெரிய காரியத்துக்கு ஆளும் வாணும், ஒண்ணும் வாண்டாங்க!" என்று சொல்லிவிட்டுப் பழனி கிளம்பினான். அவன் போன திக்கையே சற்று நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தான் கிழவன். ராசு மீண்டும் அவனது சிந்தனையைத் திருப்பினான். "ஏன்



தாத்தா, பணம் விசயமா ஏதோ சொன்னுனே, அது என்னது?"

"ஆமா, அதுனுலேதான் ஒடஞ்சு துன்னுகிறேன். என்னமோ — "அல்பத்துக்குப் பவிசு வந்தா என்னமோ என்பாங்களே, அதுமாதிரியா, ஏதோ — இவன் அப்பன் பேருக்கு நான் எழுதிக் கொடுத்திருக்க நோட்டு ஒண்ணு ஆயிரம் ரூபாய்க்கு இருக்குது. இந்த வருசம் எள்ளு மூட்டைப் புடிச்சதுலே கஷ்டம் வராமெ இருந்திருந்தா அந்தப் பய கடனைத் தீர்த்திருப்பேன் ......"

கிழவன் பெரும் ஆயாசத்துடன் வார்த்தையை நிறுத்தினுன்.

"அதெல்லாம் நீங்க கவலைப்படாதீங்க தாத்தா! இஷ்டமிருந்தாத்தான் 'கொள்ளினை கெடுப்பனை' வெக்கக்கிறதா, இல்லாவிட்டால் வலுக் கட்டாயத்துக்காக ஒரு காரியத்தைச் செய்கிறதா? சட்டியா, பானையா மாத்துகிறதற்கு? இதுக்காகக் கவலைப்படாதீங்க; இப்போ எண்ணெய் விலை ஏறிடிச்சின்னு அவன் கடனைத் தானே தொலைச்சுடறேன்" என்று சொல்லிவிட்டு ராசு எழுந்திருந்தான். கிழவன் தன்னை மறந்து பெருமூச்செறிந்தான்.

## 3

பழனி சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே, அவசரத்துடன் வெட்டிய பள்ளத்தைத் தூர்த்துக் கொண்டிருந்தான். அவ்வளவு நாழிகையாக இடுப்பொடிய வெட்டிய ஆயாசம் கூட அவனுக்குத் தோன்றவில்லை அவனது தேகத்திலிருந்து ஆறாக ஓடிக் கொண்டிருந்த வியர்வை அந்த மாலை வெய்யிலில் 'தகதக' வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது.




ஒருவழியாக அந்தப் பள்ளத்தை நன்ருக மூடிவிட்டு, அதற்கடுத்த நான்கு அடிகளுக்கு அப்பால் அடையாள மிட்டுக் கொண்டு வெட்ட ஆரம்பித்தான் பழனி. அப்பொழுதுதான்—வள்ளி அவன் கண்களுக்கெதிரில் — தோன்றினுள்.

அவன் என்ன நினைத்துக் கொண்டானே—அவளைக் கண்டதும் திடுக்கிட்டு விட்டான்!

"ஏன் இப்படி ஆடு திருடின மாதிரி முழிக்கிறே?"

பழனி பதில் பேசவில்லை.

"த! என்ன நான் கேட்கிறேன்; சொல்ல மாட்டேங்கிறே? இன்னம் அரை நாழிகைக்குள்ளாறே எட்டடி ஆழம் வெட்டிப்புடுவியா?"

"வள்ளி, இங்கே பாரு! இந்தக் கையினுலே ஒரு காரியம் ஆகணும்னு, அரை நாழி இல்லே—அரைக்கால் நாழியிலே முடிச்சுப்பிடுவேன்!"

"அதிருக்கட்டும்; இம்மாம் நேரம் வேர்க்க விறுவிறுக்க வெட்டின பள்ளத்தை ஏன் மூடினே? ஒனக்குத் திமிறு தானே?" — இப்படிச் சொல்லிவிட்டுக் 'கலகல' வென்று அவள் நகைத்தாள்.

"அதில்லை வள்ளி, அது ஏதோ ஒரு சூன்யம் கொண்ட இடம் மாதிரி இருந்தது. அதுக்காகத்தான் அதை மூடினேன்."

அவனது வார்த்தையிலிருந்தே அது பொய்யென்பது தெரிந்தது! அவளையே பார்த்துக் கொண்டு ஒரு கால் நாழிகை நின்றிருப்பான் பழனி. அடுத்த கணத்தில் அவன் முதுகிலும் விலாவிலும் தலையிலுமாக மாறி மாறி அடிகள் விழுந்தன. பழனி ஐயோ வென்று கீழே சாய்ந்தான்.

முறிந்து போய்ச் சக்கையாயிருந்த கைச் சிப்பை மனக்குறையுடன் கீழே எறிந்தான் திருவேங்கடம். அவனது சிவந்த விழிகளும், மீசையும் போட்டியுடன் கூத்தாடிக் கொண்டிருந்தன!

வள்ளியின் கூக்குரல் வாசலுக்குக் கேட்டது. மருதையும் அவனது சகாக்களும் ஒரு நொடியில் அங்கே கூடி விட்டனர். அவன் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்று விட்டான்.

"நீ மனுசனு, மிருகமா?"

வள்ளியின் ஆக்ரோஷம் நிறைந்த சொல் திருவேங்கடத்தின் இரைச்சலில் கலந்து விட்டது.

"இந்த மாதிரிக் களவாணிப் பயல்களை வேலையில வைச்சிருக்கிறதே பிசகுன்னு சொல்லிக்கிட்டிருந்தேன். உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைச்ச பயல்!"

திருவேங்கடம் பின்னும் ஏதேதோ வார்த்தை வெளிவராமல் உறுமிக்கொண்டிருந்தான்.

பழனி தடுமாற்றத்துடன் எழுந்தான். திருவேங்கடத்தை ஒரு தரம் கம்பீரமாகப் பார்த்து விட்டுப் பின்னர் மருதையின் பக்கம் திரும்பினான் "மாமா! நானும் ஏதோ பத்து வருஷத்துக்கு மேல உங்கக்கிட்டே பழகிட்டேங்க. இது வரையில எந்தவிதமான தப்புத் தண்டாவும் கிடையாது. ஆனா இப்போ நடந்த காரியத்துக்கு எதிர் மரியாதை செய்ய என்னால் முடியும். உங்களுக்கும், சத்தியத்துக்கும் கட்டுப்பட்டு நான் நிக்கிறேன். ஆனா இந்தப் பாவி சொல்றாப் போலே, 'நான் உண்ட வீட்டுக்கு ரெண்டகம்' நினைக்கிறவன் இல்லேன்னு மாத்திரம் உறுதிப்படுத்தி விடறேன்!"

அவனால் அதற்கு மேல் பேச முடியவில்லை. அவனது தொண்டை அடைத்துக் கொண்டு குரல் கம்மிற்று. அடுத்த கணத்தில் பேச்சற்றுக் கீழே சாய்ந்தான்.

திருவேங்கடம் வாய்விட்டுக் கொக்கரித்தான்.

## 4

அன்று காலை பத்து நாழிகை இருக்கும். மருதை, வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு இரண்டு பேருடன் பேசிக் கொண்டிருந்தான். அப்பொழுது தான் திருவேங்கடம் தனது சகாக்களுடன் அங்கே வந்து சேர்ந்தான்.

சற்று நேரம் என்ன பேசுவதென்று புரியாமல் திகைத்தான் மருதை. பின்னர் "தம்பி, நீ யாரு, ஒன்கிட்டே எனக்குக் கட்சியா, விரோதமா? ஏதோ இத்தினி நாளா ஒங்க அப்பன், ஆயி இருந்த வரைக்கும் ஒரு விதமான மனஸ்தாபமும் இல்லாம காலத்தைத் தள்ளிவிட்டாங்க. இப்பவும் உன் விசயத்திலே நான் எதுவும் மாறுதலா நினைக்கல்லே. ஆனா, எனக்கோ வயசாயிடுச்சி. எனக்கிருக்கிறதோ ஒரே தாயில்லா மகள். அவ சந்தோஷமா இருக்கிறதைப் பார்த்தால்தான் என் நெஞ்சு கல்லா வேகும். அவ இஷ்டத்துக்கு விரோதமா நான் எதுவும் செய்யறத்துக்கு இல்லே. ஆகையினாலே..." என்று நிறுத்தினான்.

"பின்னே, முடிவா என்ன சொல்றீங்க?" என்றான் திருவேங்கடம்.

"அதுதான் தம்பி, என் மகளுடைய விருப்பத்துக்கு மாறாகக் கண்ணாலம் செய்யறத்துக்கு இல்லையென்றுதான் சொன்னேனே!"

"திருவேங்கடத்தை நீங்க இன்னும் சரியாத் தெரிஞ்சுக்கல்லே. வழக்கத்தையெல்லாம் மீறி 'உறவு முறையானு'க்குப் பொண்ணு இல்லேன்னு சொல்ல எவ்வளவு துணிச்சல் இருக்கணும்? ஒனக்கு இஷ்டமில்லாட்டி 'மவ'ளுக்கு இஷ்டமில்லேன்னு பேரா?"

இந்தச் சமயத்தில் ரேழிப்பக்கமிருந்த வள்ளி சட்டென வெளியே வந்து "இவரைக் கண்ணாலம் செய்துக்கறத்துலே விருப்பம் இல்லே!" என்று கூறிவிட்டு, 'சரே'லென்று உட்பக்கம் சென்றுவிட்டாள்.

திருவேங்கடம் இந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. ஆனால் அதிக நேரம் திகைப்படையவுமில்லை. "எனக்கு இப்போ பணம் வேணும்......உண்டா இல்லையா?" என்றான். அவனது கண்டிப்பான குரலில் அதிகாரம் மிகைப்பட்டது.

மருதையின் கிழ முகத்தில் பரிதாபம் நிரம்பி யிருந்தது. "தம்பி, கொஞ்சம் யோசனை செய். இப்போ நானிருக்கிற நிலைமையில் உடனே எப்படிப் பணம் கிடைக்கும்? கொஞ்ச நாளிலே......"

"அதெல்லாம் முடியாது! இன்னமே ஒரு விநாடிகூடக் காத்துக்கிட்டிருக்க முடியாது. அந்த ஆயிரம் ரூபா பத்திரம் இப்போ......"

மீண்டும் மருதை இடைமறித்தான். ஆனால் திருவேங்கடம் கண்டிப்புடன் தொடர்ந்தான். "உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைச்சவனுக்கு இருக்கிற மரியாதை கூட எனக்கு இல்லை என்றால்......"

அவன் இன்னமும் வார்த்தையை முடிக்கவில்லை—அப்பொழுதுதான் அந்த எதிர்பாராத அதிசயம் நிகழ்ந்தது!

"யாருடா உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைக்கிறவன்?—இந்தா, உன் பணம் சாடாவையும் வாங்கிக்கொண்டு நோட்டைக் கீழே வை!" இப்படிச் சொல்லிக் கொண்டே நெற்றிக் கட்டுடன் பழனி பாய்ந்து வந்து கொண்டிருந்தான். அவனைத் தொடர்ந்து காட்டாண்டிமக் காரனும் இன்னும் சிலரும் வந்தனர். அடுத்த கணத்தில் — நோட்டும் சில்லறையுமாக மேல் துண்டிலிருந்ததை எடுத்து உதறினான் பழனி.

திருவேங்கடம் — அவனது வாழ்நாளிலேயே அப்பொழுதுதான் முதன் முதலாகத் திகைப்பும், ஏமாற்றமும் அடைந்தான்.

மருதையும் வள்ளியும் பரபரப்புடன் பழனியைத் தொடர்ந்து கொண்டிருந்தனர். என்னுமூட்டைகள் அடுக்கியிருந்த பின்கட்டு அறையைச் சாவி போட்டுத் திறந்து அதிலிருந்த பெரிய செப்புக் குடத்தை எடுத்துக் கவிழ்த்தான் பழனி. அதிலிருந்த நகைகளும், பொன் காசுகளும் அந்த மங்கலான அறையில் பிரகாசித்தன. அவர்களது பரபரப்பு அடங்குவதற்கு முன்னரே பழனி கூறினான்:

"செக்கைப் புதைச்சு முகூர்த்தம் செய்யறதுக்காகப் 'போத விடை' வெட்டினேனுல்ல, அந்த இடம்தான் இவ்வளவையும் தந்தது!"

மருதைக்கு ஆச்சரியமா, ஆனந்தமா—இன்னதென்று விளங்கவில்லை. மண் பிடித்துக் கருத்துப் போயிருந்த செப்புக் குடத்தைப் புரட்டிப் பார்த்து விட்டு ஆனந்தக் கூச்சலிட்டான்.

## 5

வைகறையின் மனோரம்மியமான நிலவொளி பூமியின் எழிலை மிகைப்படுத்திக் கொண்டிருந்தது. செக்கின் மெல்லிய கருநிழல் வகுத்து விட்டது போல ஊர்ந்து கொண்டிருந்தன செக்கு மாடுகள்!

பழனி கடலைச் சரக்குகளை உரலுக்குள் அடித்துக் கொண்டிருந்தான்.

"விடியக் காலையிலே யிருந்து பாட்டு இட்டெல்லாம் வவுவாத்தான் இருக்குது!"—வள்ளியின் குரலைக் கேட்டதும் பழனி உள்ளிப்புடன் கவனித்தான்.

"பின்னே என்ன; பாடாம அழச் சொல்றியா?"

"அழச் சொல்லல்லே, இன்னும் ஏதாவது 'புதையல்' கிடைக்குமான்னு பார்க்கிறதுதானே?"

"ஏ அப்பா. ஆசையைப் பாரு!—ஏன், மறுபடி என்னை அடி வாங்கச் சொல்றியா?"

"போதும், போதும் — அவன் பேச்சையே எடுக்காதீங்க!"

"ஏன் பழைய 'உறவு முறைக்கார' ராச்சுதேன்னு பரிதாபமாயிருக்குதாக்கும்?"

"த! பாத்தீங்களா! மறுபடியும் மறுபடியும்......"

பழனி சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு பரபரப்புடன் அவளை வினவினான்.

"அதிருக்கட்டும் வள்ளி, நான் ஒண்ணு கேட்கிறேன் — ஏன் அவனைக் கண்டா உனக்குப் பிடிக்கல்லே?"

வள்ளி இதை எதிர்பாராதது போல் அவனை உற்று நோக்கினாள். பின்னர், "அந்தப் பேச்சு ஏன் இப்போ? 'வள்ளிக்கும் திருவேங்கடத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்றாள்.

"அப்புமன்னு?"

"எனக்குச் சொல்லத் தெரியல்லே, போங்க! வள்ளி திருவேங்கடசாமியைக் கட்டிக் கிட்டதாகப் புராணத்திலே இல்லே!"

மங்கிய நிலவொளியில் அவனது முகம் சிவந்து விட்டது அவனுக்குத் தெரியாது! அவனது முகத்தைப் பார்க்காமலேயே அந்தக் கள்ளியும் மறைந்து விட்டாள்!

பழனி உற்சாகமாகப் பாட ஆரம்பித்தான். மாடுகள் சீறிக் கொண்டு கிளம்பின.

"வெள்ளி மூக்கணையிலே—உங்களை
வெட்டிக்கப் பூட்டவில்லை—கொஞ்சம்
தள்ளியே நடைபோட்டு—உங்க
தண்டனையைத் தவித்திடுங்க!

"கட்டவுத்துப் போட்டவுத்து—
கடலைக்காணம் வெச்சிடுவேன்—
சுடுக்கியே நடந்திடுங்க—
கவட்டுக்காரக் காளைகளா!"

வழக்கம்போல் செக்கின் கருநிழலும் பற்பல ஸ்தாயிகளில் முழங்க ஆரம்பித்தது!

---

### ராஜகோபாலன் — மீனாக்ஷி



திருச் சத்தியமூர்த்தியின் சகோதரர் ஸ்ரீ எஸ். ராமச்சந்திர அய்யரின் குமாரர் சிரஞ்சீவி ஆர். ராஜகோபாலனுக்கும் அண்ணாமலை சர்வகலாசாலை பௌதிகப் பேராசிரியர் ஸ்ரீ ஆர்.கே. விஸ்வநாதன் குமாரத்தி சௌபாக்கியவதி மீனாட்சிக்கும் சென்ற மாதம் 12-ந் தேதியன்று விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்தின் போது தம்பதிகளுக்கு ஏராளமான வாழ்த்துக்களும் பரிசுகளும் வந்து சேர்ந்தன. வாழ்க, ராஜகோபாலன்-மீனாக்ஷி!

சென்னையிலுள்ள பற்பல மாதர் சங்கங்கள் சேர்ந்து பண்டித நேருவுக்கு அளித்த வரவேற்பு வைபவத்தில் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் ஹிந்தி மொழி உபசாரப் பத்திரம் படித்து அளித்தார்.



ஆகாச விமான நிலையத்தில் பண்டித நேரு வந்திறங்கியபோது இராணுவ பாண்டு முழங்கியது.

# பேராசிரியர் வ. ரா. மணி விழா நிதி

## 31-7-48 வரையில் நன்கொடை விவரம்

செந்தமிழ் நாட்டிலும் அப்பாலும் உள்ள தமிழ் எழுத்தாளர்களுக்கும் இலக்கிய அன்பர்களுக்கும் தமிழ் அன்பர்களுக்கும் வணக்கம். தமிழ் நாட்டின் எழுத்தாளர் முதல்வரான பேராசிரியர் வ. ரா. அவர்களின் அறுபதாவது ஜன்ம தினம் வருகிற செப்டம்பர் 17உ வருகிறது. அன்றைய தினத்தில் வ. ரா. மணி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடவும் வ. ரா. அவர்களின் முப்பது வருஷத் தமிழ்த் தொண்டைப் பாராட்டிப் பண முடிப்பு ஒன்று அளிக்கவும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. கவிகளையும், புலவர்களையும், எழுத்தாளர்களையும் அவர்களுடைய ஜீவிய காலத்திலேயே பாராட்டிச் சன்மானிக்க வேண்டும் என்ற கொள்கையில் யாருக்கும் எத்தவித அபிப்பிராய பேதமும் இருக்க முடியாது. ஆதலின் தங்களுடைய அன்பையும் அபிமானத்தையும் ஆர்வத்தையும் காளது புண்ணிய ஆகஸ்டு மாதத்துக்குள்ளே செயலில் காட்ட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். ஊருக்கு ஊர் பட்டணத்துக்குப் பட்டணம், நகரத்துக்கு நகரம் வ. ரா. மணி விழாக் கமிட்டி அமைத்துக் கொள்ளுங்கள். தமிழ் மறுமலர்ச்சிப் பயிர் தழைக்க அரும்பாடு பட்ட அறிஞரை, ரஸிகரை, தோழரை, தலைவரைத் தமிழ்மக்கள் நன்கு பாராட்டி மரியாதை செய்தார்கள் என்னும் புகழ் ஏற்படுமாறு பிரயத்தனம் தொடங்குங்கள். நிதிக்கு நன்கொடை அனுப்பக் கூடியவர்கள் அனுப்பிவையுங்கள். உங்கள் ஊரில் உள்ள இலக்கிய அன்பர் ஒவ்வொருவரையும் பார்த்துப் பேசி நன்கொடை அனுப்பச் செய்யுங்கள். ஸ்தலக் கமிட்டி அமைத்துக் கமிட்டியின் பெயரால் நன்கொடை வசூலித்து அனுப்பக் கூடுமானால் மிக்க உத்தமம். கமிட்டி அமைக்க முடியாவிட்டால் தனிப்பட்ட முறையில் வேலை தொடங்குங்கள்.

ஸ்ரீ கே. ஆர். ஸ்ரீனிவாசன், ஆசிரியர், சுதேசமித்திரன், சென்னை 500 0 0

ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம், ஆசிரியர், தினசரி, சென்னை 500 0 0

ஸ்ரீ எஸ். வி. சாமி, ஆசிரியர், பாரத தேவி, சென்னை 500 0 0

"கல்கி" நிர்வாகிகள் 500 0 0

ஸ்ரீ கே. ஸ்ரீனிவாசன், ஆசிரியர், ஹிந்து, சென்னை 500 0 0

ஸ்ரீ எஸ். எஸ். வாசன், ஆசிரியர் ஆனந்த விகடன், சென்னை 500 0 0

ஸ்ரீ என். ராமரத்தினம், ஆசிரியர், கலைமகள், சென்னை 500 0 0

ஸ்ரீ எஸ். பி. ஆதித்தன், ஆசிரியர் தினத் தந்தி, சென்னை 500 0 0

ஸ்ரீ ராமநாத் கோயங்கா, ஆசிரியர், இந்தியன்-எக்ஸ்பிரஸ். 500 0 0

கிருஷ்ணன் & பஞ்சு, சினிமா டைரக்டர்கள், சென்னை 501 0 0

ஸ்ரீ கின்னரா சி. தெற்காசி 251 0 0

ஸ்ரீ எஸ். ஏ. ஷாபி முகம்மது, சென்னை 250 0 0

ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணா, டி. வி. எஸ். & ஸன்ஸ், மதுரை 250 0 0

ஸ்ரீ ஏ. எம். சம்பந்தம், நெல்சன் & கோ., சென்னை 250 0 0

ஸ்ரீ எஸ். வி. சஹஸ்ரநாமம், சினிமா நடிகர், சென்னை 201 0 0

ஸ்ரீ பி. சூரியநாராயணா, சென்னை 116 0 0

ஸ்ரீ எஸ். செல்லியப்ப முதலியார். சென்னை 116 0 0

தமிழ்நாடு டாக்கீஸ், சென்னை 101 0 0

ஸ்ரீ ஆர். எம். ராமனாதன் செட்டியார், நியூடோன் ஸ்டுடியோ. 101 0 0

ஜூபிடர் பிக்சர்ஸ், சென்னை 101 0 0

ஒரு அன்பர் 61 0 0

ஸ்ரீ ஸ்ரீதன் பானர்ஜி, சென்னை 51 0 0

ஸ்ரீ என். என். எம். லக்ஷ்மணன் செட்டியார், கிருஷ்ணா பிக்சர்ஸ், சென்னை 51 0 0

ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன், எம். எல். ஏ., மதுரை 50 0 0

ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர், சென்னை 50 0 0

பாணி பிக்சர்ஸ், தியாகராய நகர், சென்னை 50 0 0

ஸ்ரீ வி. டி. ரங்கசாமி அய்யங்கார், ராயபேட்டை, சென்னை 50 0 0

ஸ்ரீ ஏ. வேதரத்தினம் பிள்ளை, எம். எல். ஏ., வேதாரண்யம் 25 0 0

கல்வி மந்திரி ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார் 25 0 0

ஸ்ரீ ஏ. பீம் சிங், உதவி-டைரக்டர், சென்னை 25 0 0

ஸ்ரீ எஸ். வி. கணபதி அய்யர், சென்னை 25 0 0

ஸ்ரீ என். வி. ராஜாமணி, சென்னை 25 0 0

மெஸ்ஸர்ஸ் வீ கம்னி, நகை வியாபாரிகள், சென்னை 25 0 0

ஸ்ரீ எஸ். ஆர். தியாகராஜன், ஸியன்னி எலக்டிரிக் கம்பெனி. 25 0 0

ஸ்ரீமதி ஏ. ஆர். சகுந்தலா, சினிமா நடிகை, சென்னை 20 0 0

ஒரு அன்பர் 20 0 0

ஸ்ரீ பி. கின்கர்ராஜு, என். எஸ். கே. பிலிம்ஸ், சென்னை 15 0 0

இதர நன்கொடைகள் 38 4 0

ஆக மொத்தம் ரூ. 7369 4 0

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி



## 41. 'கூலிச்சேரி'யில் கொள்ளை நோய்

இந்திய தேசத்தில் ஹிந்துக்களாகிய நாம், சமூகத்துக்குச் சிறந்த தொண்டு செய்து வரும் சில வகுப்பாரைத் தீண்டாதார் என்று ஒதுக்கித் தனிப்பட்ட சேரிகளில் வசிக்கும்படி செய்து வந்திருக்கிறோமல்லவா? இந்தக் கர்மத்தின் பலனைத் தென்னாப்பிரிக்காவில் எல்லா இந்தியர்களுமே அநுபவிக்கும்படி நேர்ந்தது. அந்த நாட்டில் இந்தியர்கள் எல்லாரும் பொதுவாகக் 'கூலிகள்' என்று அழைக்கப்பட்டார்கள். இந்தியாவில் 'தீண்டாதார்' என்பதற்கு என்ன பொருளோ அதே பொருள் தென்னாப்பிரிக்காவில் 'கூலிகள்' என்பதற்கு ஏற்பட்டிருந்தது. தீண்டாதாருக்கு இந்தியாவில் தனியாகச் சேரிகள் ஏற்பட்டிருப்பது போல் தென்னாப்பிரிக்காவில் 'கூலிகள்' என்று சொல்லப்பட்ட இந்தியர்கள் வசிப்பதற்குத் தனிப்பட்ட பகுதிகள் ஒதுக்கப்பட்டிருந்தன. அவை 'கூலிச் சேரிகள்' என்று பெயர் பெற்றிருந்தன.

டிரான்ஸ்வாலின் தலைநகரமான ஜோகானிஸ்பர்க்கில் இந்தியர் வசித்த 'கூலிச் சேரி' ஒன்று இருந்தது. அந்தக் கூலிச் சேரியிலும் இந்தியர் சொந்தமாக நிலம் வாங்கிக் கொள்ள முடியாது. அதில் வசித்த இந்தியர்கள் குடியிருப்பு நிலத்தை ஜோகானிஸ்பர்க் நகர சபையாரிடமிருந்து 99 வருஷக் குத்தகைக்குப் பெற்றிருந்தார்கள். ஜனத்தொகைப் பெருக்கத்துக்குத் தகுந்தாற்போல் சேரியின் விஸ்தீரணம் அதிகரிக்கவில்லை. எனவே மிக நெருக்கடியில் இந்தியர்கள் வசித்து வந்தார்கள். சுகாதார வசதிகளுக்கு நகர சபையார் தக்க ஏற்பாடு செய்யவில்லை. நல்ல சாலைகள் இல்லை; விளக்குகள் போடவில்லை. அங்கு வசித்த இந்தியர்கள் பெரும்பாலும் கல்வியறிவில்லாத ஏழைத் தொழிலாளி வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் சுகாதார விதிகளை அறிந்திருக்கவில்லை. இந்தியர்களின் அறியாமையும் நகர சபையின் அசட்டையும் சேர்ந்து மேற்படி 'கூலிச்சேரி'யைச் சுகாதாரக் கேடான நரகமாகச் செய்திருந்தன. நகர சபையார் தங்களுடைய அசட்டையினால் நேர்ந்திருந்த இந்தத் தீமையை நிவர்த்திக்க முயல்வதற்குப் பதிலாக, அதையே காரணமாகக் கொண்டு இந்தியர்களை அவ்விடமிருந்தே விரட்டிவிட யத்தனித்தார்கள். இந்தியர்கள் 99 வருஷக் குத்தகைக்குப் பெற்றிருந்த நிலத்தைப் பெயருக்கு நஷ்ட ஈடு என்று கொடுத்து பறித்துக் கொள்ளும் முயற்சி தொடங்கினார்கள்.

நகர சபை நிர்ணயிக்கும் நஷ்ட ஈட்டுப் பணத்தை ஒப்புக்கொள்ளத் தயாராயில்லாத இந்தியர்கள் 'அப்பீல்' செய்து கொள்ள ஏற்பாடு இருந்தது. இதற்காக விசேஷக் கோர்ட்டு ஒன்று நியமிக்கப்பட்டது. இந்தக் கோர்ட்டில் இந்தியர்கள் பலர் அப்பீல் செய்து கொண்டார்கள். அவர்களுக்காகக் காந்திஜி ஆஜராகிப் பேசினார். வழக்குகள் ஜெயித்தாலும் தோற்றாலும் பத்து பவுனுக்குமேல் 'பீஸ்' பெற்றுக்கொள்வதில்லையென்றும், அந்தத் தொகையிலும் பாதியை ஏழை இந்தியர்களின் உதவிக்காக ஒதுக்கி வைப்பதென்றும் காந்திஜி தீர்மானித்தார்.

மொத்தம் எழுபது வழக்குகளில் காந்திஜி ஆஜரானார். அவற்றில் ஒரு வழக்குத்தான் தோல்வி அடைந்தது. மற்றவை ஜயித்தன. இந்த வழக்குகளில் காந்திஜி இரவு பகல் கஷ்டப்பட்டு உழைத்தார். இதனால் ஏழை இந்தியர்களின் அன்புக்குப் பெரிதும் பாத்திரமானார். அதே சமயத்தில் வருமானமும் நிறையக் கிடைத்தது. ஆனால் அப்போது காந்திஜி தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் உரிமைகளை வற்புறுத்துவதற்காக "இண்டியன் ஒபீனியன்" என்ற பத்திரிகையை ஆரம்பித்திருந்தார். ஆரம்ப நாட்களில் பத்திரிகை நடத்துவதில் ஏராளமான நஷ்டம் ஏற்பட்டு வந்தது. அந்த நஷ்டத்தை

யெல்லாம் காந்திஜி தம் சொந்த வருமானத்திலிருந்தே ஈடு செய்தார். மொத்தம் 1600 பவுன் வரையில் காந்திஜி மேற்படி பத்திரிகையின் கஷ்டத்தைச் சரிக்கட்டக் கொடுத்ததாகத் தமது சுய சரித்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தப் பண கஷ்டத்தை யெல்லாம் ஈடு செய்யுமாறு இந்திய சமூகத்தின் அன்பைக் காந்திஜி பெற்று வந்தார். அதற்கு அறிகுறியாக எல்லா இந்தியர்களும் அவரைப் 'பாய்' என்று அழைக்கத் தொடங்கினார்கள். 'பாய்' என்ற ஹிந்தி வார்த்தைக்கு 'அண்ணா' என்று பொருள். இவ்விதம தம்மோடு தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் எல்லாரும் உறவு உரிமை கொண்டாடியது காந்திஜிக்கு மிக்க மகிழ்ச்சி தந்தது.

* * *

இந்தியர் வசித்த கூலிச் சேரி முழுதும் நகர சபைக்குச் சொந்தமாகி விட்டது. ஆனாலும் அவர்களுக்கு வேறு இடம் கண்டு பிடித்துக் கொடுக்கும் வரையில் அங்கேயே வசிக்கும்படி விட்டு வைக்க நேர்ந்தது. இது காரணமாகச் சுகாதாரக் கேடு மேலும் அதிகமாயிற்று. வீடும் நிலமும் சொந்தமாயிருந்த வரையில் இந்தியர்கள் ஓரளவாவது சுத்தப்படுத்தி வந்தார்கள். நகரசபைக்குச் சொந்தமான பிறகு அதுவும் போயிற்று. நகர சபையும் சுகாதாரத்துக்கு அவசியமான ஏற்பாடு எதுவும் செய்யவில்லை.

இத்தகைய கேவலமான நிலைமையில் கூலிச்சேரி இருந்தபோது ஒரு பெரிய விபத்து ஏற்பட்டது. ஜோகானிஸ்பர்க்கில் அருகில் இருந்த தங்கச் சுரங்கம் ஒன்றில் கருமகாமாரி (Black Plaguo) என்னும் பயங்கரக் கொள்ளை நோய் ஆரம்பித்தது. சுரங்கத்தில் வேலை செய்தவர்கள் பெரும்பாலும் நீக்ரோக்கள். சில இந்தியர்களும் அங்கே வேலைசெய்து கொண்டிருந்தனர். இவர்களில் 23 பேரைத் திடீரென்று ஒருநாள் கருமகாமாரி பற்றியது. அவர்கள் கூலிச்சேரியில் தங்கள் இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தனர். காந்திஜியின் சகாக்களில் ஒருவரான ஸ்ரீ மதன்ஜித் என்பவர் 'இண்டியன் ஒபீனியன்' பத்திரிகைக்குச் சந்தா வசூலிப்பதற்காக அன்று அங்கே தற்செயலாகப் போயிருந்தார். கொள்ளை நோயினால் பீடிக்கப்பட்ட மனிதர்களை அவர் பார்த்தார். உடனே காந்திஜிக்கு ஒரு குறிப்பு எழுதி அனுப்பினார் :—"இங்கே கருமகாமாரி தோன்றியிருக்கிறது. உடனே தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்திய சமூகம் பெரும் விபத்துக்கு உள்ளாகும். தயவு செய்து உடனே புறப்பட்டு வாருங்கள்."

இவ்விதம் காந்திஜிக்கு எழுதி அனுப்பி விட்டு ஸ்ரீ மதன்ஜித் காலியாயிருந்த ஒரு வீட்டின் பூட்டை உடைத்துத் திறந்தார். நோயாளிகளை யெல்லாம் அந்த வீட்டில் வந்து இருக்கும்படி செய்தார். இதற்குள் காந்திஜியும் சைகிள் வண்டியில் ஏறித் துரிதமாக வந்து சேர்ந்தார். ஜோகானிஸ்பர்க்கில் வைத்தியத் தொழில் செய்து கொண்டிருந்த டாக்டர் வில்லியம் காட்பிரே என்னும் இந்தியக் கிறிஸ்தவரும் மேற்படி செய்தியைக் கேட்டு விரைந்து வந்தார். இந்த மூன்று பேருமாக நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யத் தொடங்கினார்கள். ஆனால் அவ்வளவு நோயாளிகளையும் கவனித்துக் கொள்ள மூன்று பேர் போதவில்லை. காந்திஜியின் காரியாலயத்தில் அப்போது நாலு இந்திய இளைஞர்கள் வேலை செய்து கொண்டிருந்தனர். கல்யாண்தாஸ், மாணெக்லால், குணவந்தராய் ஆகிய மூவரையும் இன்னொருவரையும் நோயாளிகளுக்குத் தொண்டு செய்யச் சம்மதமா என்று காந்திஜி கேட்டார். அது பெரிய அபாயகரமான காரியம் என்றும் உயிரை இழக்கவும் நேரிடலாம் என்றும் காந்திஜி சொன்னார். நால்வரும் சிறிதும் தயங்காமல் ஒப்புக் கொண்டார்கள். "நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ அங்கே நாங்களும் இருப்போம்!" என்று பதில் தந்தார்கள். அந்தக் காலத்திலேயே காந்திஜியின் செல்வாக்குக்கு உட்பட்டவர்கள் சகல பரித்தியாகங்களையும் செய்வதற்குத் தயாராயிருந்தார்கள்.

இரவெல்லாம் கண் விழித்து மேற்சொன்ன ஏழு பேரும் நோயாளிகளுக்குப் பணிவிடை செய்து வந்தார்கள். அவ்வப்போது மருந்து கொடுத்தார்கள். நோயாளிகளையும் அவர்களுடைய படுக்கைகளையும் அடிக்கடி சுத்தம் செய்தார்கள். நோயாளிகளுக்குத் தைரியம் கூறி உற்சாகப்படுத்தி வந்தார்கள்.

காலி வீட்டைப் பூட்டை உடைத்துத் திறந்தது பற்றி நகரசபைக்கு உடனே காந்திஜி எழுதி விட்டார். அதற்குப் பதிலும் வந்தது. நகரசபைக் காரியஸ்தர் காந்திஜிக்கும் அவருடைய சகாக்களுக்கும் சமயத்தில் சரியான காரியம் செய்ததற்காக நன்றி செலுத்தினார். மறுநாள் நகர சபையின் உத்தரவுப்படி காலியாயிருந்த கிடங்கு

ஒன்று காந்திஜியிடம் ஒப்புவிக்கப்பட்டது. நோயாளிகளை அந்தக் கிடங்குக்கு மாற்ற வேண்டும் என்று உத்தரவும் பிறந்தது. ஆனால் நோயாளிகளுக்கு வேண்டிய வசதி ஒன்றும் அங்கே இல்லை. அசுத்தமாயிருந்த அந்தக் கிடங்கைக் காந்திஜியும் அவருடைய சகாக்களும் சுத்தப் படுத்தினார்கள். சில படுக்கைகளையும் வைத்திய சாதனங்களையும் சம்பாதித்துக் கொண்டு வந்தார்கள்.

நகரசபையார் அனுப்பிய ஒரு தாதியும் வந்து சேர்ந்தாள். தாதி அன்பான உள்ளம் கொண்டவள். நோயாளிகளுக்குத் தானே பணிவிடை செய்வதாகச் சொன்னாள். ஆனால் நோயாளிகளை அவள் தொடும்படியே மற்றவர்கள் விடவில்லை.

கருமகாமாரிக்குப் பிராந்தி ஒரு மருந்து என்று கருதப்பட்டது. நோயாளிகளுக்கு அடிக்கடி கொடுக்க வேண்டும் என்றும் பணிவிடை செய்கிறவர்களும் அடிக்கடி பிராந்தி சாப்பிட வேண்டும் என்றும் சொல்லப்பட்டது. தாதி அவ்விதமே அடிக்கடி பிராந்தி குடித்துக் கொண்டிருந்தாள். ஆனால் காந்திஜி முதலியோர் பிராந்தியைத் தொடவில்லை.

நோயாளிகளில் மூன்று பேர் பிராந்தி குடிக்காமல் சிகிச்சை பெற இணங்கினார்கள். அவர்களுக்குக் காந்திஜி தலையிலும் மார்பிலும் ஈர மண்ணை வைத்துக் கட்டினார். மூன்று பேரில் இருவர் பிழைத்தார்கள். ஒருவர் இறந்துவிட்டார். வழக்கமான சிகிச்சை பெற்ற இருபது பேரும் மாண்டு போனார்கள்.

இதற்கிடையில் நகரசபையார் ஜோகானிஸ்பர்க்குக்கு ஏழுமைல் தூரத்தில் ஓர் இடத்தைக் குறிப்பிட்டு, தொற்று நோயாளிகளை அங்கே கொண்டு போக வேண்டும் என்றார்கள். இறந்தவர்கள் போக உயிரோடிருந்த இருவரும் அங்கே கொண்டு போய்ச் சேர்க்கப் பட்டனர். புதிதாக யாருக்காவது நோய் கண்டால் அவர்களையும் உடனே அவ்விடத்துக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப் பட்டது.

பாவம்! பிராந்தி குடித்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பிய தாதி கொள்ளை நோயினால் பீடிக்கப்பட்டு இறந்து போனாள். காந்திஜியையும் அவருடைய சகாக்களையும் தொற்றுநோய் பீடிக்கவில்லை. இதிலிருந்து பிராந்தியை மருந்தாகச் சில சமயங்களில் உபயோகப்படுத்துவது முழுத்தவறு என்ற முடிவுக்குக் காந்திஜி வந்தார்; ஈர மண் சிகிச்சையில் அவருடைய நம்பிக்கையும் அதிகமாயிற்று.

நோயாளிகளின் பொறுப்புத் தீர்ந்த பிற்பாடும், காந்திஜிக்கு வேறு ஒரு பெரிய பொறுப்பு ஏற்பட்டது. 'கூலிச்சேரி' விஷயத்தில் ஏற்கெனவே அலட்சியமாக இருந்த நகரசபையார் கருமகாமாரி நோய் வந்த பிறகு, அது வெள்ளைக்காரர்களையும் பற்றி விடக்கூடாதே என்று மிகவும் கவலை காட்டினார்கள்; தாராளமாகப் பணமும் செலவழித்தார்கள். மேற்படி கொள்ளை நோயை அடியோடு ஒழிப்பதற்குக் கூலிச்சேரியை முழுதும் எரித்துவிட வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. இதற்காக இந்தியர்கள் எல்லாரையும் அங்கிருந்து வெளியேற்ற வேண்டியிருந்தது. காந்திஜியின் உதவி யில்லாவிட்டால் இந்த வேலை மிகவும் கஷ்டமாய்ப் போயிருக்கும். ஆனால் காந்திஜி பொது நலத்தை முன்னிட்டு அதிகாரிகளுடன் ஒத்துழைக்க முன்வந்தார். கூலிச்சேரியில் வசித்த இந்தியர்கள் அனைவரும் ஜோகானிஸ்பர்க்குக்கு பதின்மூன்று மைல் தூரத்தில் இருந்த திறந்தவெளியில் சென்று இருபத்தோரு நாள் வசிக்கவேண்டும் என்றும், எல்லாரும் புறப்பட்டுச் சென்ற பிறகு கூலிச்சேரியை எரித்துவிட வேண்டும் என்றும் ஏற்பாடு. வெகுகாலமாக வசித்த இடத்திலிருந்து ஜனங்களைக் கிளப்புவது இலேசான காரியமா? தாங்கள் கிளம்புவதுடன் உணவுப் பொருள்களையும் மற்றும் அவசியமான சாமான்களையும் எடுத்துப் போக வேண்டும். அதிக உபயோகமில்லாத தட்டுமுட்டுச் சாமான்களை அக்கினி பகவானுக்கு இரையாகும்படி விட்டுவிட்டுப் போக வேண்டும். எவ்வளவு பயனற்ற சாமான்களாயிருந்தபோதிலும் பல காலமாகச் சேர்த்து வைத்திருந்தவர்களுக்கு அவற்றை விட்டுப் போக மனம் வராதல்லவா?—போகிற இடத்திலாவது வீடுவாசலுண்டா? திறந்த வெளியில் மூன்று வாரம் வசிக்க

வேண்டும். ஆயினும் காந்திஜியும் அவருடைய சகாக்களும் கேட்டுக் கொண்டதின் பேரில் கூலிச்சேரியில் இருந்த அவ்வளவு இந்தியர்களும் புறப்படச் சித்தமானார்கள். ஆனால் ஒரு விஷயத்தில் அவர்களுக்குப் பெருங் கவலை ஏற்பட்டது.

அவரவர்களும் வெகுகாலமாகப் பாடுபட்டுத் தேடி ஏதோ கொஞ்சம் பணம் மீத்து வைத்திருந்தார்கள். பணத்தைப் பாங்கியில் போடுவதென்பது அந்த ஏழைத் தொழிலாளிகளுக்குத் தெரியவே தெரியாது. அவரவர்கள் வசித்த குடிசையில் தரையைத் தோண்டிப் புதைத்து வைத்திருந்தார்கள். மேற்படி சிறு தொகைகளையெல்லாம் என்ன செய்வது என்பது பற்றிக் கவலை உண்டாயிற்று. திறந்த வெளியில் வசிக்கப் போகும் இடத்துக்குப் பணத்தைக் கொண்டுபோக அவர்களுக்கு மனம் இல்லை. திருட்டுப் போய்விட்டால் என்ன செய்கிறது? காந்திஜியிடம் இது விஷயமாக முறையிட்டார்கள். "பாங்கியில் போடுங்கள்!" என்று காந்திஜி சொன்னார். "எங்களுக்குப் பாங்கியில் போடத் தெரியாது. போட்டால் திரும்பி வருமோ என்னமோ, யார் கண்டது? பாங்கியின் பக்கம் போவதே எங்களுக்குக் கஷ்டம்!" என்றார்கள். அவர்களில் ஒருவர், "உங்களிடமே கொடுத்து வைக்கிறோம்; நீங்கள் வைத்திருந்து திருப்பிக் கொடுங்கள்" என்றார். எல்லா இந்தியர்களும் அப்படியே சொன்னார்கள். "உங்களிடம் பணம் இருந்தால் எங்களுக்குக் கவலையில்லை" என்றார்கள். அந்த ஏழைத் தொழிலாளிகள் தம்மிடத்தில் காட்டிய நம்பிக்கை காந்தி மகாத்மாவின் உள்ளத்தை உருக்கியது. அவர்களுடைய பாங்கியாக இருந்து உதவ ஒப்புக் கொண்டார். இது சாதாரண விஷயமல்ல. நூற்றுக்கணக்கான இந்தியர்கள் தங்களுடைய சேமிப்புப் பணத்தைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். பெரும்பாலும் செப்புக் காசுகளும் வெள்ளி நாணயங்களுமாக வந்து குவிந்தன. இவற்றையெல்லாம் எண்ணி எடுத்துக் கொண்டு அவரவர்கள் பேரில் கணக்கு எழுதவேண்டும். அவ்வளவு நாணயங்களையும் காந்திஜி என்ன செய்ய முடியும்? தம்முடைய பெயரில் பாங்கிக்குத் தான் அனுப்ப வேண்டும். பிளேக் நோய்ப் பகுதியிலிருந்து வந்தவை யென்று பாங்கிக்காரர்கள் எடுக்க மறுத்துவிடக் கூடும். பாங்கி மானேஜரிடம் பேசிக் காந்திஜி சரிக்கட்டினார். நாணயங்களையெல்லாம் மருந்து ஜலம் விட்டுச் சுத்தம் செய்து பாங்கிக்கு அனுப்பினார். இவ்விதம் இந்தியர்கள் சிறிது சிறிதாகச் சேர்த்து வைத்திருந்த தொகைகள் சேர்ந்து மொத்தம் அறுபதினாயிரம் பவுன் காந்திஜியிடம் ஒப்படைக்கப்பட்டது. அவ்வளவையும் பாங்கியில் பத்திரப்படுத்தி, சரியாகக் கணக்கு வைத்திருந்து, பிற்பாடு காந்திஜி திருப்பிக் கொடுத்தார்!

பிற்காலத்தில் காந்திஜி இந்தியாவில் பல பொதுக்காரியங்களுக்குப் பணம் வசூல் செய்தார். ஜோகானிஸ்பர்க்கில் ஏழை இந்தியர்கள் காந்திஜியிடம் எப்படிப் பூரண நம்பிக்கை வைத்திருந்தார்களோ அப்படியே இந்தியர்கள் எல்லாரும் அவரிடம் நம்பிக்கை காட்டினார்கள். பல காரியங்களுக்கு லட்சக்கணக்கான தொகை கொடுத்தார்கள். அவ்வளவையும் இந்திய ஏழை மக்களின் பணமாகவே காந்திஜி கருதிப் பத்திரப்படுத்தி அந்த ஏழை மக்களுக்கே பயன்படும் முறையில் உபயோகப்படுத்தினார். நிற்க.

'கூலிச்சேரி'யில் இந்தியர் அனைவரும் தனி ரயில் வண்டிகளில் ஏற்றப்பட்டு நகரத்துக்கு பதின்மூன்று மைல் தூரத்திலிருந்த கிளிப்ஸ் கேட் பண்ணைக்குக் கொண்டு போகப் பட்டார்கள். அங்கே கூடாரங்கள் சில போடப்பட்டிருந்தன. திறந்த வெளியிலும் கூடாரங்களிலும் வசித்துப் பழக்கமில்லாதவர்களாதலால் இந்தியர்கள் முதலில் கஷ்டப்பட்டார்கள். இருபத்துநாலு மணி நேரத்துக்குள் அவர்கள் தங்கள் தொல்லைகளை மறந்து குதூகலமாயிருக்கத் தொடங்கினார்கள். ஒவ்வொரு நாளும் காந்திஜி சைக்கிளில் அங்கே சென்று அவர்களுடைய சுக துக்கங்களை விசாரித்து விட்டு வந்தார். இது அவர்களுடைய கவலையைப் போக்குவதற்கு உதவியாயிருந்தது. சில நாளைக்கெல்லாம் அவர்கள் ஆடிப்பாடிச் சிரித்துக் களிக்கத் தொடங்கி விட்டார்கள். மூன்று வாரம் திறந்த வெளியில் வசித்ததால் அவர்களுடைய தேக ஆரோக்கியமும் அபிவிருத்தி யடைந்தது.

இந்தியர்கள் காலி செய்து விட்டுப் போன மறுநாளே கூலிச் சேரிக்குத் தீ வைக்கப்பட்டது. இதே சமயத்தில் நகர சபையின் மார்க்கெட்டில் செத்த எலி விழுந்தது காரணமாக மார்க்கெட்டும் கொளுத்தப் பட்டது. நகரசபைக்குப் பத்தாயிரம் பவுனுக்குமேல் நஷ்டமாயிற்று. ஆயினும் நகரத்தில் கொள்ளை நோய் மேலும் பரவாமல் தடுக்கப்பட்டது.

# காலக்ஷேபம்

### வெறுப்பது யார்?

சோமு ஒரு போக்கிரிப் பையன். அவன் எதாவது விஷமம் செய்து கொண்டே யிருப்பான். பக்கத்து வீட்டுப் பெரியவருக்கு அவனைக் கண்டால் பிடிப்பதில்லை.

பெரியவர்:—சோமு, நீ ரொம்பப் போக்கிரி! உன்னைக் கண்டால் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.

சோமு:—ஏன் அப்படி? நீங்கள் என் மேல் பக்ஷமாக அல்லவா இருக்க வேண்டும்?

பெரியவர்:—நான் உன்மேல் பக்ஷமா யிருப்பதா? ஏனோ?

சோமு:—'யார் உன்னை வெறுக்கிருர்களோ, அவர்களை நீ நேசி' என்று என் பாட புத்தகத்தில் போட்டிருக்கிறதே!

★

### பண விஷயம்!

"என்ன சொல்லியும் பிரயோஜனமில்லை. மண்டையை உடைத்துக்கொண்டு சொல்லிக் கொடுத்தால்கூட இந்தப் பெண்பிள்ளைகளுக்குப் பண விஷயமே மூளையில் ஏறுகிறதில்லை."

"என்ன விசேஷம்?"

"விசேஷமா? நான் நேற்று ஒரு நாள் ஊரில் இல்லை. ஐந்து ரூபாய் நஷ்டம். குழந்தை ஒரு காலணாவை விழுங்கிவிட்டதாம். அதற்காக ஐந்து ரூபாய் செலவழித்து டாக்டரை வரவழைத்திருக்கிறள்!"

★

### இல்லை, இல்லை!

"ஆறு மாதமாகக் கடைக்கு வாடகை கொடுக்காமலே இருக்கிறீர்களே! நானும் நமது நீண்ட நாள் சிநேகத்தைப் பெரிதாக மதித்து இதுவரையில் பொறுத்துப் பார்த்தேன். கடைசியில், நீங்கள் கடையைக் காலி செய்துவிட வேண்டியதாய்த்தானிருக்கும். தயாராயிருங்கள்!"

"என்ன ஸார்! அவ்வளவு கோபமாகப் பேசிவிட்டீர்கள். உங்களுக்குச் சேரவேண்டிய வாடகைப் பணத்தைக் கொடுக்காமலா காலி செய்து விடுவேன் என்று நினைக்கிறீர்கள்? ஒரு நாளும் இல்லை!!"

### தேகப் பயிற்சி

டாக்டர்:—நீங்கள் சின்ன தேகப்பயிற்சி ஒன்று செய்தால் உடம்பு குணமாகிவிடும்.

நோயாளி (அஜீரணத்தால் கஷ்டப்படுபவர்):—அது என்ன, ரொம்பக் கஷ்டமோ?

டாக்டர்:—அதொன்றும் இல்லை. இடப்புறமும் வலப்புறமும் தலையை வேகமாக ஆட்ட வேண்டும்.

நோயாளி:—எப்போதெல்லாம் அப்படிச் செய்யவேண்டும்?

டாக்டர்:—யாராவது உமக்கு ஆகாரம் கொண்டு வரும்போது!

★

### பேஷ்!

ஒரு விருந்தாளி வந்து ஒரு மாதத்துக்கு மேலாகியும் கிளம்பும் யோசனை யில்லாதவராகவே இருந்தார். ஒருநாள் அவர் ஊருக்குப் போகப் போவதாகச் சொன்னார்.

விருந்தாளி:—நாளைக்கு நான் ஏறப்போகிற வண்டி எத்தனை மணிக்குக் கிளம்புகிறது?

நண்பர்:—இப்பொழுதி லிருந்து கணக்குப் பார்த்தால் 23 மணி $57\frac{1}{2}$ நிமிஷம் இருக்கிறது!

### தேசீயத் திருமணம்



கொலை வழக்கில் ஜெயில் தண்டனை பெற்ற திருச்செந்தூர் தேசபக்தர் ஸ்ரீஞ்சின் ஏ. எஸ். பெஞ்சமினுக்கும் சௌபாக்கியவதி பெட்ஸியவுக்கும் சென்ற மாதம் 12-ந் தேதி யன்று சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. சுதந்திர இந்தியாவின் சின்னமாகிய அசோக சக்கரமும் நமது தேசியக் கொடியும் அமைந்த மாங்கல்யத்தை ஸௌ. பெட்ஸியவுக்கு ஸ்ரீ. ஏ. எஸ். பெஞ்சமின் கட்டினார். இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் சென்னை சர்க்காரின் மந்திரிகளிடமிருந்தும் மணமக்களுக்கு வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. வாழ்க, பெஞ்சமின் — பெட்ஸி!

# பாட்டி

முதற் பரிசுக் கதை 2



— ராகவன் —

காலையில் கடிதம் வந்தது முதல் என்னை வீட்டில் தொந்தரவு செய்கிறார்கள். 'மணந்தால் என்னையே மணப்பது. இல்லாவிட்டால் பிரம்மசாரியாக இருப்பது' என்று அவர் அப்பாவுக்கு எழுதியிருக்கிறாராம். போன வாரம் வந்த வரன், நினைத்தாலே சிரிப்புத்தான் வருகிறது! இவர் என் அதிர்ஷ்டத்தை அறியாதவர் போலும்!

எனக்கு வந்த வரன்களில் நிச்சயமான முதல் நபர், டைபாய்டு ஜுரம் வந்து செத்து விட்டார். அதற்குப் பின் வந்த வரனோ பணக்கார இடம்; படித்தவரும் கூட. கலியாணத்திற்கு நான்கே தினங்கள் இருந்தபோது அவர் பாம்பு கடித்துக் காலமானார். இப்படி நாலைந்து சம்பவங்கள் என் துரதிர்ஷ்டத்தை அடிக்கடி நினைவு படுத்திக் கொண்டே இருந்தன. மாப்பிள்ளை வீட்டார்கள் என்னைப் பார்க்க வருவதே அதிர்ஷ்டக் குறைவு என்றும், என் பெயரை உச்சரிப்பதே மகா பாதகமென்றும் நினைத்தனர்.

இந்த லட்சணத்தில் என் சிநேகிதை ஒருத்தி விசேஷ சலுகை காட்டி, மேலே குறிப்பிட்ட நபரை மணந்து கொள்ளும்படி எனக்குக் கடிதம் எழுதியிருந்தாள். என் சம்மதத்தைச் சிநேகிதைக்கு எப்படித் தெரிவிக்க? 'முடியும், முடியாது' என்று ஒரே வரியில் பதில் எழுத வேண்டுமாம். அந்த ஒரு வரி எழுத எனக்குத்தான் எவ்வளவு குழப்பம்!

ஒரு மணி நேரமாக ஒன்றும் ஓடாமல் பேனாவும் கையுமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால், ஏதோ கதை எழுத அவஸ்தைப் படுகிறாள் என்றுதான் யாரும் நினைப்பார்கள். அப்படியொன்றும் இல்லை; என் வாழ்க்கைப் பிரயாணத்தைத் தீர்மானிக்கும் யோசனையில் தான் நான் ஆழ்ந்திருந்தேன்.

திடீரென்று யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. "அந்த மாப்பிள்ளை தான் நேரில் தோன்றி, 'நீ என்னை

# சொன்ன கதை

கோமதி சுப்ரமணியம்



மணக்க முடியுமா, முடியாதா?' என்று கேட்க வந்து விட்டாரோ?" என்று எண்ணி நாணத்தால் முகம் சிவக்கத் திரும்பினேன். வந்திருந்தவள் எங்கள் பாட்டி!

"என்ன, அம்மா! ஆழ்ந்த யோசனை? கலியாணம் நடக்கவில்லையே என்ற கவலையா?" என்றாள் பாட்டி.

"அதெல்லாம் ஒன்றுமில்லை; சிறு கதை எழுதப் போகிறேன்!" என்று நான் பொய் சொன்னேன்.

"கதையிலே சிறு கதை, பெரிய கதை என்று உண்டா?" என்றாள்.

அவள் சிறு கதையின் இலட்சணங்களை எங்கே கண்டாள்? பாட்டிக்கதைதானே அவளுக்குத் தெரியும்? —இந்த நினைப்பு வரவே எனக்குச் சிரிப்பு வந்தது.

"ஏன் சிரிக்கிறாய், கனகம்? நான் ஒரு கதை சொல்லட்டுமா?" என்றாள்.

பாட்டி சொல்லப் போகிற கதை மகா மட்டமாக இருக்குமென்ற நம்பிக்கைதான். இருந்தாலும் என்ன சொல்லுகிறாள், பார்ப்போம் என்ற ஆசையுடன் கடிதம் எழுத வேண்டிய பேனாவைக் கீழே வைத்தேன். குழம்பிய என் மனதிற்கு அவளுடைய கதை நிம்மதியும் தெளிவும் தரலாம் என்ற எண்ணம் பிறந்தது.

* * *

"ஓர் ஊரிலே கனகம் கனகம் என்பதாக ஒரு பெண் இருந்தாள். அவள் நல்ல அழகி. மஞ்சள் பூசி மினுமினுக்கும் முகத்திலே குங்குமத் திலகமிட்டால் பொட்டிட்ட குத்துவிளக்குப் போல் சுடர் விடும். கொடி போன்ற எடுப்பான உயரம்; குறு குறுப்புத் துள்ளும் உதடு; படிப்பு அதிகமில்லை. அந்தப் பெண்ணின் அழகிலும், அவளுடைய அப்பாவின் பணத்திலும் ஆசை கொண்டு, நான் நீ என்று பலர் போட்டியிட்டார்கள்.

பாவம், அவள் அப்பாவுக்குக் கொஞ்சம் ஜாதகப் பைத்தியம்......''

"பாட்டி! போதும், போதும்! என் கதையையே என்னிடம் சொல்கிறாயே!'' என்றேன்.

"அடி பைத்தியக்காரப் பெண்ணே! உலகத்தில் நீ ஒருத்திதானா கனகம்? உன்னைப் போல் துரதிர்ஷ்டம் கொண்ட பெண்கள் இன்னும் எத்தனையோ பேர் இல்லையா?—கதையைக் கேள்!'' என்று பாட்டி மேலும் சொன்னாள்:—

"சர்க்கிள் சாம்பசிவம் பிள்ளையின் செல்வப் புதல்விகளான கனகமும், காத்தாவும் கவலையென்பதே இன்ன தென்று அறியாமல் செல்வமாக வளர்ந்து வந்தார்கள். நினைத்ததை யெல்லாம் அனுபவிக்க மனமும், பணமும் இருக்கும் பொழுது அவர்களுக்கு என்ன குறைவு? சுகத்தையே அனுபவிக்கப் பிறந்தவர்கள் என்ற இறுமாப்பிலேயே அவர்களுடைய காலம் சென்று கொண்டிருந்தது.

"பள்ளிப் பரீட்சை யெல்லாம் முடிந்தது; இனி வாழ்க்கைப் பரீட்சையில் தேற வேண்டியதுதான் பாக்கி. ஒரு நாள் மாலைப் பொழுது. திருகி விட்ட ரேடியோ தனது கடமையை நினைத்துப் பாடிக் கொண்டிருந்தது. அந்த பாட்டைக் கவனித்து அதனுடன் சேர்ந்து பாடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள் கனகம். வாசலில் கார் வந்து நின்றது. வழக்கம் போல் சாம்பசிவம் பிள்ளை மட்டும் தனிமையில் இறங்கி வரவில்லை: அவருடன் புதிதாக இருவரை அழைத்து வந்தார். அவர்கள் பேசிக் கொண்ட தோரணையிலிருந்து, வருகிறவர்கள் இன்னார் என்று தெரிந்து



கொண்ட கனகத்தின் தாயார், 'வாருங்கள், வாருங்கள்' என்று கூறி அவர்களை உபசரித்தாள்.

'ஏன் அம்மா, கனகம்! உனக்கு இவர்களைத் தெரியவில்லையா? வந்தவர்களை 'வா' என்று கூடக் கூப்பிடாமல் பேசாமலிருக்கிறாயே! இன்னும் அதற்கான வயசாகவில்லையா?' என்று அவள் அம்மா சற்றுக் கடிந்து கொண்டாள்.

'அவளுக்கு எப்படித் தெரியும்? நாங்கள் இந்த ஊரை விட்டுப் போய் எத்தனையோ வருஷமாகிறது. கனகம் அப்பொழுது சின்னக் குழந்தை. இப்பொழுது எப்படி நினைவிற்கு வரும்?' என்று அவள் சார்பாகப் பேசினாள் வந்திருந்த அம்மாள்.

'நாலைந்து நாட்களுக்கு முன் கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறார்கள் என்று சொன்னேனல்லவா? அந்த மாமாவும் அத்தையும்தான் இவர்கள். எழுந்து வந்து நமஸ்காரம் செய்!' என்றாள் தாயார்.

"கல்கத்தா என்ற வார்த்தை காதில் விழுந்ததும், கனகத்தின் அகராதியில் அது ஒரு புது அர்த்தத்தை உண்டு பண்ணிற்று. அவளும் சந்திரனும் சிறு பிராயத்தில் ஆற்றோரம் சென்று நாவல் பழம் பொறுக்கித் தின்பதுண்டு. அந்த ஆற்றின் காட்சியும், நாவல் பழத்தின் ருசியும் அவள் நினைவுத் திரையில் எழுந்தன. எத்தனையோ நாட்கள் அவர்கள் இருவருமாகச் சேர்ந்து மடி குலுங்கப் பழங்களைச் சேகரித்து, ஆற்றின் படிக்கட்டிலே உட்கார்ந்து தின்றிருக்கிறார்கள். அவர்களுக்கு எதிரே 'ஓ' வென்று இரு கரையும் தொட்டுப் பாய் விரித்தோடும் ஆறு.

"ஒரு நாள் பழங்கள் போதுமானபடி கிடைக்காததால், சந்திரனை மரத்தின் மீதேறித் தனக்கு வேண்டிய பழங்களைப் பறித்துத் தரும்படி சொன்னாள் கனகம். சந்திரனுக்கோ மரம் ஏறிப் பழக்கமில்லை. இருந்தாலும் பெண்ணல்லவா கேட்கிறாள்? அந்த வீராப்பில் மரத்தின்மேல் ஏறி விட்டான். கருகருவென்று இருந்த பழங்களைப் பறித்துக் கீழே போட்டான். கனகம் அவற்றைத் தன் பாவாடையில் ஏந்திக் கொண்டாள். உற்சாக மிகுதியில், சந்திரன் தான் ஏறியிருந்த கிளையின் நுனி வரைக்கும் போய்ப் பழங்களைப் பறிக்க ஆரம்பித்தான். அந்தக் கிளையின் வலுவற்ற தன்மையையோ, கீழே சுழித்தோடும் நதியின் பயங்கரத்தையோ அவன் கவனிக்கவில்லை. அது மெல்லிய கிளையும் கூட. அத்துடன் அதன் அடிப் பாகம் வேறு ஜலத்தைத் தொட்டுக்

கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் சந்திரனின் தகப்பனார் குரல் எங்கிருந்தோ வந்தது. 'மாமா வந்துவிட்டார்' என்று கத்தினாள் கனகம். தகப்பனாருக்குப் பயந்து நடுங்கி மரக் கிளையோடு வழுக்கி விழுந்தான் சந்திரன். அடுத்த கணம் 'ஐயையோ!' என்ற கூக்குரல். கனகத்தின் குரலைக்கேட்டு ஓடி வந்த சந்திரனின் தகப்பனார் ஆற்றில் பாய்ந்து அவனைக் காப்பாற்றினார். தனக்காகத்தானே அன்று சந்திரன் அந்த ஆபத்தில் சிக்கினான்?

இந்தச் சம்பவத்தை நினைத்துக் கொண்டு எதிரே இருந்த மாமனையும் அத்தையையும் பார்த்தபோது கனகத்தின் கண்கள் கலங்கின. துக்கத்தினால் அல்ல; ஆனந்தத்தினால்தான். அன்று தனக்காகச் சாக இருந்தவன் இவ்வளவு நாட்களுக்குப் பின்னால் தன் கையைப் பிடிக்க வரப் போகிறான். இதை நினைக்கும்போது அவளுக்குச் சந்தோஷமாக இருக்காதா?—ஆனால் பாழும் நாணம் அதற்குள் எங்கிருந்தோ வந்து தொலைந்தது. சங்கோஜத்தோடு நமஸ்காரம் செய்து விட்டு, வீட்டுக்குள் ஓடிப் போய் விட்டாள். வந்திருந்தவர்கள் தாங்கள் ஏதோ பெரும் பாக்கியம் செய்திருப்பதால்தான், கனகம் தங்களுக்கு மருமகளாகக் கிடைக்கிறாள் என்று எக்களிப்போடு சொன்னார்கள். கனகத்தின் பெற்றோரும் சந்திரன் தங்களுக்கு மருமகனாகக் கிடைக்கிற பாக்கியத்தை வானளாவப் புகழ்ந்தார்கள். பேச்சு பராபரியாகப் போய்க் கடைசியில் நிச்சயதார்த்தத்தில் வந்து முடிந்தது.

"கனகத்தின் விவாகத்திற்கு நாள் குறித்தாகி விட்டது. பெரிய இடத்துக் கலியாணம். ஆடம்பரத்துக்குக் கேட்பானேன்? வெகு தடபுடலாகக் கலியாண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. இந்த நல்ல இடத்தில் சம்பந்தம் கிடைத்தது கனகத்தின் அதிர்ஷ்டமென்று எல்லோரிடமும் சொல்லிப் பெருமைப் பட்டுக் கொள்வதில் அவள் அம்மாவுக்கு அளவு கடந்த திருப்தி. அவள் தங்கை காந்தாவுக்கோ மாப்பிள்ளை அழகை வர்ணிப்பதிலேயே அலாதி ஆசை. 'அக்கா! அவரைக் கணவனாக அடையும் உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!' என்பாள் காந்தா. யாவரும் புகழ்வதைக் கேட்டுப் புளகாங்கிதம் அடைந்த கனகம் தன்னுடைய அதிர்ஷ்டத்தில் தானே பெருமிதம் கொண்டாள். விவாகத்திற்கு இன்னும் ஒரு வாரமே பாக்கி இருந்தது.

"அன்று பிள்ளை வீட்டிலிருந்து இருவர் முகூர்த்தப் புடவையைத் தேர்



தெடுப்பதற்காகப் பெண் வீட்டாரை அபிப்பிராயம் கேட்க வந்திருந்தார்கள். 'சில புடவைகளைக் கொடுத்தனுப்பினால் கனகம் அவளுக்குப் பிடித்தமானதை நேரிலேயே பார்த்து எடுத்துக் கொள்ளுகிறாள். நான் மட்டும் உங்களுடன் கடை வீதிக்கு வருவதை விட இது நல்ல யோசனை அல்லவா?' என்றாள், கனகத்தின் தாயார். மாப்பிள்ளை வீட்டாருக்கும் அதுவே உசிதமாகப் பட்டது. கடையிலிருந்து பல புடவைகளை மாதிரிக்குக் கொடுத்தனுப்பியிருந்தார்கள். வானவில்லைப் போன்று பல நிறங்களிலும் புடவைகளை விசிறி விசிறியாக வீசி வரிசையாகப் பிரித்துக் காண்பித்துக் கொண்டிருந்தான் புடவைக்காரன். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறந்ததாகக் கண்ணைப் பறித்தது.

'கதர்க் கொடி பார்டர்தான் இப்பொழுது 'பாஷன்'. அதை எடுத்துக் கொள், அக்கா!' என்றாள் காந்தா.

'அதிலெல்லாம் அதிக ஜரிகையே யில்லையே! இந்தக் கொடிக் கராச்சியை எடுத்துக் கொள்ளேண்டி! ஜரிகை எவ்வளவு பளபளப்பாக இருக்கிறது, பார்!' என்று ஜரிகையில் மயங்கினாள் அம்மா.

"அவைகளொன்றையும் கவனியாமல் மூட்டையின் ஓர் ஓரத்திலிருந்த கிளிப் பச்சைப் புடவை யொன்றைச் சுட்டிக் காட்டி, அதுதான் தனக்கு வேண்டுமென்றாள் கனகம். அப்பொழுது அங்கு நின்று கொண்டிருந்த மாப்பிள்ளையின் தங்கை, 'இந்தப் புடவையைத்தான் என் அண்ணாச்சியும் நல்லாயிருக்கு என்

ளூர்கள்' என்று தன் காரியத்தில் வெற்றி பெற்றுவிட்ட சந்தோஷத்துடன் ஆயிரத் தோராவது தடவையாகச் சொன்னான்.

"அண்ணன் சொல்லி விட்டதை மறக்காமல் வந்து முதல் சொல்லிக் கொண்டிருந்தாள் அந்தப் பெண். இதோடு ஆயிரம் தடவை சொல்லியாகி விட்டது. அங்கிருந்தவர்களில் ஒருவராவது அச் சிறுமியின் பேச்சைக் கேட்கவில்லை. ஆனால் கனகம் மட்டும் எப்படியோ அதைக் கவனித்துவிட்டாள். அதனால்தான் அந்தப் புடவையே வேண்டும் என்று அம்மாவிடம் சொன்னாள்!

'அடி, அம்மா! கலியாணமாவதற்குள்ளேயே மாப்பிள்ளையின் போக்குப்படி அநுசரித்து நடக்கப் படித்துக் கொண்டாளே! அதுதான் பெண்களுக்கு அழகு!" என்றாள் அம்மா.

8

"அன்று திங்கட்கிழமை. விவாகத்திற்கு இன்னும் மூன்று நாட்களிருந்தன. பெண்ணுக்குச் சீர் கொடுக்கப் போகும் வெள்ளிப் பாத்திரங்களுக்குப் பட்டியல் தயாரித்துக் கொண்டிருந்தாள் கனகத்தின் தாயார். அப்பொழுது மாப்பிள்ளை வீட்டிலிருந்து வந்த வேலைக்காரன், 'அம்மா உங்களைக் கையோட கூட்டியாரச் சொன்னாங்க!' என்று அவசரமாக அழைத்தான்.

'கனகம், அறையைப் பத்திரமாகப் பூட்டி வை. நான் வந்து எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொள்ளுகிறேன்' என்று மகளிடம் சாவியைக் கொடுத்துவிட்டுச் சாமான்களைப் போட்டது போட்டபடியே போட்டுவிட்டு, வேலைக்காரனின் பின்னால் சென்றாள்.

"அவள் திரும்பி வீட்டிற்கு வரும்போது வெகு நேரமாகிவிட்டது. வந்தவள் ஒருவருடனும் முகம் கொடுத்துப் பேசவில்லை. தாங்க முடியாத துயரை அநுபவிப்பவள் போல் முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு பிரமை பிடித்தவள் போலிருந்தாள். அம்மாவின் மாறுதலைக் கண்டு திகிலடைந்தனர் பெண்கள். 'அம்மா, என்ன விசேஷம்? போன இடத்தில் என்ன நடந்தது?' என்று கவலையுடன் விசாரித்தனர்.

'என்னத்தைச் சொல்வேன் கனகம்! உன்னுடைய அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதோ? உன்னுடைய தலையில் என்ன எழுதி யிருக்கிறதோ?' என்று விம்மினாள் தாயார்.



'என்ன, என்ன!' என்று ஒன்றும் புரியாமல் திகைத்தார்கள் சுற்றியிருந்தவர்கள்.

'மாப்பிள்ளை முந்தாநாள் சாயந்திரம் தலையை வலிக்கிறதென்று வந்து படுத்துக் கொண்டாராம். கைப் பக்குவத்தில் ஏதோ மருந்து கொடுத்திருக்கிறார்கள். வரவரக் குளிரும் ஜுரமும் அதிகமாகி யிருக்கிறது. டாக்டர்களை வரவழைத்துக் காண்பித்திருக்கிறார்கள். டாக்டர் இப்பொழுது ஒரு இன்செக்ஷன் கொடுத்திருக்கிறார். இன்றைய பொழுது தாண்ட வேண்டுமென்று சொல்லி யிருக்கிறாராம். பிள்ளை வீட்டில் எல்லோரும் இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறார்கள். இந்தப் பாவியின் கண்களால் இன்னும் என்னவெல்லாம் பார்க்க வேண்டுமோ? அதிகமாக இருந்தால் ஆள் விடச் சொல்லி விட்டு வந்துவிட்டேன்' என்று குமுறினாள் அவள்.

"அம்மா சொல்வதை விடாமல் கேட்டுக்கொண்டிருந்த கனகத்திற்கு இந்த உலகமே தலை கிறுகிறுத்துச் சுழல்வது போலிருந்தது. அங்கிருந்த ஒவ்வொருவரின் உள்ளத்திலும் பலவித எண்ணங்கள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. அதற்குள் தூரத்தில் பிள்ளை வீட்டு வேலைக்காரன் வந்துகொண்டிருந்தான். பதறும் உள்ளத்துடன் ஓடிப் போய் அவனை விசாரித்தாள் அம்மா.



அவன் என்ன சொன்னானோ தெரிய வில்லை; வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு வந்தாள் அம்மா.

"அன்று மாலை கனகமும், மாப்பிள்ளை யும் ஜாம், ஜாம் என்று ஊர்வலம் போக வேண்டிய வீதியிலே, துன்பமும் துயர மும் பொங்கப் ஒளிப் பச்சைப் புடவை எடுத்துக் கொடுத்தவனின் உடலம் போய்க் கொண்டிருக்கிறது. ஜன்னல் வழி யாக அந்த சோகக் காட்சி தெரிந்தது. கனகம் கண்ணில் நீர் மல்கப் பார்க்கிறாள், சங்கொலியும் கூட்டமும் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து மறைகிறது.

"கலியாணத்திற்கென வந்திருந்த விருந்தினர்கள் பலர். அவர்களில் ஒரு கிழவிக்கு இந்தக் கண்ணழவியைக் காண மனம் பொறுக்கவில்லை. கனகத்தைக் கட்டிக்கொண்டு அழுத அவள் தாயைப் பார்த்து, 'ஏன் அம்மா, காமாட்சி! இப்படி அபசகுனம் மாதிரி அந்தக் குழந் தையைக் கட்டிக்கொண்டு அழலாமோ! உனக்குக் கொஞ்சமாவது புத்தி யிருக் கிறதா?' என்று கடிந்து கொண்டாள்.

'இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்தவனைப் பார்க்கும்பொழுதே என் வயிறு பற்றி எரிகிறதே, பாட்டி!' என்று அலறினாள் கனகத்தின் தாயார்.

'இப்பொழுது கனகத்துக்கு என்ன துரதிர்ஷ்டம் வந்துவிட்டது? என்னமோ அவனுக்கு விதி வந்தது, போனான்! அதற்கு இந்தப் பெண்ணைக் குறை கூறி என்ன பிரயோஜனம்? கலியாணத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன் வந்த சாவு, விவாகமான இரண்டு தினங்களுக்குப் பின் வந்திருந்தால்.........? இதிலேயே தெரியவில்லையா, உன் மகள் அதிர்ஷ்ட சாலி யென்று?'' என்றாள் பாட்டி.

இதைக் கேட்டுக் கனகத்தின் தாயார் ஒருவாறு ஆறுதலடைந்தாள்.

### 4

"இது நடந்து இரண்டு வருஷம் வரை கனகத்தின் விவாகத்தைப் பற்றி யாருமே பேசவில்லை. அதன் பின் எத் தனையோ பிள்ளை வீட்டார்கள் வந்து போய் விட்டனர். ஆனால் விவாகம் முடியவில்லை. காரணம் கனகத்தின் அழகை விரும்பிய மாப்பிள்ளை வீட்டார், அவளுடைய அதிர்ஷ்டத்தை விரும்ப வில்லை. கடைசியில், விதியை வெல்லு வதில் தன்னம்பிக்கை கொண்ட மாப் பிள்ளை ஒருவர் அவளை ஏற்றுக்கொள்ளத் துணிந்து முன் வந்தார். ஆனால் அந்தத் துணிவைக் கனகம் ஏற்றுக் கொள்ள வில்லை. அவள் தன் மனதைத் திடப் படுத்திக் கொண்டு அம்மாவிடம் நெஞ் சைத் திறந்து சொன்னாள்:

'அம்மா, காலை வருகிற மாப் பிள்ளைக்குத் தங்கை காந்தாவை நிச்சயம் செய்து விடு!'

'கனகம், இது என்ன வார்த்தை?' என்று பதறினாள் தாயார்.

"முன்பொரு தடவை விவாகம் நிச்சய மாகிக் கலைந்து போனதற்கும், இப் பொழுது நிச்சயமாகும் போலிருக்கும் பொழுதே அபசகுனமாய்க் கனகம் பேசு வதற்கும் ஏதாவது சம்பந்தமிருக்குமோ என்று நினைத்தது தாய் உள்ளம்.

'அம்மா, உண்மையிலேயே நான் ஒரு அதிர்ஷ்டக் கட்டைதான்! இனி யொரு வரை மனதாலும் நினைக்க முடியாது. கடைசிவரை நான் கன்னியாகவே வாழத் தீர்மானித்து விட்டேன்!' என்றாள் கனகம்!''

• • •

இந்த இடத்தில் பாட்டி சற்றுக் கதையை நிறுத்தினாள். இதுவரை கன கத்தின் வாழ்வும் என் வாழ்வும் ஒரே பாதையில் சென்றதால், அந்தக் கதை யைக் கேட்பதில் என் மனம் லயித்திருந் தது. என்னுடன் அறிமுகமாகாத அந் தப் பெண்ணுக்காக என் மனம் பச்சா தாபம் கொண்டது.

"பாட்டி, கடைசியில் அந்தப் பெண் வாழ்நாள் முழுவதும் கன்னியாகவே இருந்து விட்டாளா?" என்று மேலும் விடாமல் கேட்டேன்.



"இல்லை, அது தான் இல்லை; அவள் என்றும் கன்னியாக இருந்து விட நினைத்தாள். ஆனால் விதி வேறு விதமாக இருந்தது. மறுநாள் அவளைப் பார்க்க வந்த மாப்பிள்ளை, பிடிவாதமாகக் கனகத்தைத் தான் மணந்து கொள்ளுவேன் என்று சொன்னாராம்!"

"அப்புறம் கலியாணம் நடந்ததாக்கும்?"

"ஆமாம், கதை எப்படி இருக்கிறது?"

"கதை நன்றாகத்தானிருக்கிறது; ஆனால் முடிவு சுகமில்லை......!"

"ஏன், எந்த இடம் உனக்குப் பிடிக்கவில்லை......?"

"உயிருக்குப் பயந்து சாகும் இந்த நாளில் தன்னை வெறுத்து ஒரு பெண்ணைக் கரையேற்ற யார் முன் வருவார்கள்! அப்படி நடந்திருந்தாலும் விவாகமான சில நாளைக்கெல்லாம் அவர் இறந்துவிட்டாரோ, என்னவோ?"

"நீ நினைப்பது தவறு. வாழ்க்கையில் நாம் நினைப்பது போலவே எல்லாம் நடப்பதில்லை. 'பயந்தவர்களுக்குத்தான் அச்சானம்; துணிந்தவர்களின் வாழ்க்கை ரஸமானதாக இருக்கும்' என்று வசனம் சொல்லுவது போல் அந்த மகானும் இன்று வரை உயிருடனிருக்கிறார்!"

"நீங்கள் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லையே!"

"நான் சொல்லுவதில் நம்பிக்கையில்லையானால் அதோ வருகிறாரே, அவரைக் கேள்!" என்று வாசல் பக்கத்தைச் சுட்டிக் காட்டினாள் பாட்டி.

வாசலில் என்னுடைய தாத்தா பொக்கை வாய் தெரிய சிரித்தபடியே வந்து கொண்டிருந்தார். நான் பார்த்த பார்வையிலேயே விஷயம் என்னவென்பதைப் புரிந்து கொண்ட தாத்தா, பாட்டி சொன்ன அதே கதையைத் திரும்பவும் ஒரு தடவை சொல்லி முடித்தார்.

அவரும் அந்த கதையைச் சொல்லவே நான் பிரமிப்படைந்தவளாய்த் தன்னை மறந்து உட்கார்ந்திருந்தேன். என் மனம் அவர்கள் இருவரும் சொன்ன கதையின் சாராம்சத்தை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது. அவர்களிருவரும் சொன்ன சோகக் கதையின் முடிவு கடைசியில் சுபமாக முடிந்தது. இரண்டு தடவை விவாகம் நிச்சயமாகிக் கலைந்து போய் விட்ட விசனத்தில் குன்றிப்போயிருந்த என் மனதிற்கு, இந்த முடிவு சற்று ஆறுதலளிப்பது போலிருந்தது. அந்த ஆறுதலில் என்னையே மறந்தவளாய்ச் சிந்தனையில் ஆழ்ந்தேன்.

அந்த வேளையில், "என்ன கனகம், புடவை எடுக்கக் கடை வீதிக்கு வருகிறாயா?" என்று தாத்தா கேட்பதைப் பார்த்து ஒன்றும் புரியாமல் விழித்தேன்.

"உன்னைக் கூப்பிடவில்லை, பேத்திப் பெண்ணே! உன் பெயருள்ள பாட்டியைக் கூப்பிடுகிறேன்!" என்றார் தாத்தா.

இதைக் கேட்ட என் பாட்டி அப்பொழுதுதான் சின்னப் பெண் மாதிரி நாணத்தினால் தலை குனிந்தாள். "என்ன தாத்தா, விளையாடுகிறீர்களா?" என்று கேட்டேன் நான்.

"விளையாடவில்லையே! என்னுடைய கனகத்தைக் கூப்பிட்டேன்!" என்று பாட்டியைப் பார்த்துக் கண் சிமிட்டினார் தாத்தா.

பாட்டி சிரித்தாள். அவளுடைய சிரிப்பில்தான் எவ்வளவு பெருமை! இன்னும் நாலைந்து தினங்களில் வரப் போகிற 'அறுபதாம் கலியாண'த்திற்குத் துணிமணி எடுக்க அவர்கள் இருவரும் கடைக்குப் புறப்பட்டார்கள்.

நான் ஜன்னல் வழியே அந்தத் தம்பதிகளைப் பார்த்தபடி நின்றிருக்கலாம். ஆனால் எதிரில் இருந்த பேனாவும் காகிதமும் என் மன நிலைக்கு இடம் தரவே, தோழிக்கு ஒரே வரியில் என் அபிப்பிராயத்தை எழுத ஆரம்பித்தேன்.

பாட்டியின் கதையைக் கேட்ட பிறகு, அந்த வரி வேறு என்னவாயிருக்கும்?— "எனக்குச் சம்மதம்" என்பதைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்?

# ஈழம் தந்த இருமணிகள்

ரஜனி

ஈழ நாடென்னும் யாழ்ப்பாணம் தமிழுக்குப் பெயர் போனது. பிறமொழிக் கலப்பில்லாமல் தனித்தமிழ் பேசும் தமிழ் மரபினரை யாழ்ப்பாணத்தில் மட்டுமே காணலாம். தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகவே ஈழ நாட்டை யாழ்ப்பாணத் தமிழர்கள் கருதுகிறார்களென்றாலும், தமிழ்நாடு செய்யத் தவறிய ஒரு மாபெரும் பணியை ஈழ நாட்டார் செய்து வருகின்றனர். வட இந்தியாவில் ஜனித்த புனித பௌத்த மதத்தைத் தென்னிலங்கைச் சிங்களவர் போற்றிப் புகழ்ந்து பாதுகாத்து வருவதைப் போல, தென்னிந்தியாவில் ஜனித்த புராதனத் தமிழ்ப் பண்பாட்டை அதன் பழம் பெருமையுடனும் பொலிவுடனும் காப்பாற்றி வருகின்றனர் வட இலங்கைத் தமிழர்கள். இந்த வகையில் யாழ்ப்பாண மக்களுக்குத் தமிழ் மரபினர் என்றென்றும் கடமைப் பட்டிருக்கின்றனர்.

## விபுலானந்த அடிகளுக்கு ஞாபகச் சின்னம்

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரும், சென்ற வருஷம் அகால மரண மடைந்த சுவாமி விபுலானந்த அடிகளும் ஈழம் ஈன்ற இரு மணிகள். சில தினங்களுக்கு முன் திருகோணமலை என்ற ஊரில் சுவாமி விபுலானந்தரின் நினைவு நாள் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்பொழுது பல அறிஞர்கள் சுவாமிஜியின் தமிழ்ப் பணியைச் சிலாகித்துப் பேசினார்கள். "யாழ் நூலை இயற்றிக் கொடுத்த மகா மேதை" என்று புகழ்மாலை சூட்டினார்கள். "இளங்கோ அடிகளின் அவதாரமே சுவாமிஜி" யென்றார் ஒருவர். ஆனால், பண்டிதர் நடராஜா ஒரு முக்கியமான விஷயத்தைச் சுட்டிக் காட்டினார் "போன வருஷமும் இப்படித் தான் கூடிப் பேசினோம். சுவாமிஜிக்கு ஒரு ஞாபகச் சின்னம் எழுப்ப வேண்டுமென்று முக்கிய கூட்டத்தில் தீர்மானித்தோமே, அதைப்பற்றி பிறகு யாராவது சிந்தனை செய்தோமா?" என்று இடித்துக் காட்டிக் கேட்டார். இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், அவர் இவ்விதம் இடித்துக் கேட்ட கூட்டத்திலும் ஞாபகச் சின்னத்தைப் பற்றி முடிவான தீர்மானம் எதுவும் செய்யப்படவில்லை. தமிழ்ப் பணியாற்றிய தவமுனிவர் விபுலானந்தருக்கு ஞாபகச் சின்னம் எழுப்புவதென்றால் யாழ்ப்பாணத்தில் மட்டுமல்ல, தமிழ்நாட்டிலும் அதற்குப் பேராதரவு கிடைக்கும். சுவாமிஜி தமிழ் மரபினர் அனைவருடைய பக்திக்கும் உரியவர். அந்த நிலையில் சுவாமிஜியின் ஞாபகச் சின்னம் எழுப்புவதற்கு நடவடிக்கை யெடுக்க இன்னும் தாமதிப்பானேன்?

## திடீர் மாறுதல்

இலங்கை உள்நாட்டு மந்திரியாயிருந்த ஸர். ஆலிவர் குணதிலகா இங்கிலாந்தில் இலங்கை ஹை கமிஷனராக நியமிக்கப் பட்டிருக்கிறார். அவர் மந்திரி பதவியை ராஜீநாமாச் செய்து லண்டனுக்குப் புறப் பட்டவுடன் மந்திரி சபையில் பெரும் மாறுதல்கள் ஏற்படுமென்று அரசியல் வட்டாரங்கள் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. ஆனால் ஸர் ஆலிவர் திடீரென்று லண்டனுக்குக் கிளம்பினார். முதல் நாள் இரவு வரை அவர் புறப்படப் போவது அவருடைய பார்லிமெண்டரி காரியதரிசிக்குக்

---

### ஒருவர்தான்!

புகழ்பெற்ற ஆங்கில ஆசிரியர்களுள் எச். ஜி. வெல்ஸ் என்பவரும் ஒருவர். அவர் தமது எழுபத்தொன்பதாவது பிறந்த தினத்தின் போது பின் வருமாறு கூறினார்:—

"எனக்கு எத்தனையோ அன்பர்கள் இருக்கிறார்கள். ஆனால் நான் சீக்கிரம் இறக்க வேண்டும் என்று விரும்புகிறவர்கள் யாராகிலும் உண்டா என்றால் ஒரே ஒரு ஆசாமி தான் உண்டு என்பேன். அவர் வேறு யாருமில்லை—என்னுடைய டாக்டர் தான். இரண்டு வருஷங்களுக்கு முன்பு என் உடல் நிலை சம்பந்தமாக அவரை விசாரித்தபோது நான் இனி வெகு சொற்பகாலமே வாழ்வேன் என்றார். ஆனால் நான் ஒவ்வொரு நாளும் வாழ்ந்து அவர் வாக்கைப் பொய்யாக்கி வருகிறேன் அல்லவா?"

---

கூடத் தெரியாது. ஸர். ஆலிவரின் வண்டன் பிரயாணம் இவ்வளவு பெரிய மர்மமாக வைக்கப் பட்டிருந்தது எல்லோரையும் திகைப்பு அடையச் செய்திருக்கிறது. ஸர். ஆலிவர் ஸ்தானத்தில் செனட்டர் இ. ஏ. பி. விஜயரத்ன என்ற சிங்களவர் உள்நாட்டு மந்திரியாக நியமிக்கப் பட்டிருப்பது இன்னும் அதிக ஆச்சரியத்தை அளித்திருக்கிறது. ஸர். ஆலிவர் புறப் பட்டவுடன் தமிழ் காங்கிரஸ் தலைவர்கள் மந்திரி சபையில் பிரவேசிப்பார்களென்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அத்தகைய மாறுதல் எதுவும் ஏற்படாதது இன்னும் அதிக ஆச்சரியத்தை விளைவித் திருக்கிறது.

## சுதந்திர இலங்கையின் முதலாவது பட்ஜட்

சுதந்திர இலங்கையின் முதலாவது பட்ஜட்டை சென்ற வாரம் பொக்கிஷ மந்திரி ஜே. ஆர். ஜயவர்த்தன டொமினியன் பார்லிமெண்டில் சமர்ப்பித்தார். அதில் பெரும்பாலோர் எதிர்பார்த்தபடி புதிய வரிகள் ஒன்றுமில்லை. பழைய வரிகளில் மாறுதல்களுமில்லை. இலங்கையின் பொருளாதார வளத்தை அபிவிருத்தி செய்ய ஆறு வருஷத் திட்டமொன்றை அவர் வெளியிட்டார். அந்தத் திட்டத்தில் தமிழர்கள் வசிக்கும் யாழ்ப்பாண மாகாணத்தின் விவசாய அபிவிருத்தியைப் பற்றிப் பிரஸ்தாபமே இல்லாதது பெருத்த ஏமாற்றத்தையும் மனக் கசப்பையும் உண்டு பண்ணியிருக்கிறது. இலங்கையிலுள்ள இந்தியர்களின் நிலை விதியை நிர்ணயிக்க மூன்று மசோதாக்கள் கூடிய சீக்கிரம் பார்லிமெண்டுக்கு வருமென்றும் பொக்கிஷ மந்திரி தமது பட்ஜட் பிரசங்கத்தில் சொன்னார்.

இந்த மசோதாவைப் பற்றி பண்டித நேருவுடன் கலந்து பேசச் சென்றிருந்த இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர் ஜனாப் அப்துல் அஜீஸ் சமீபத்தில் விமானத்தில் இலங்கைக்குத் திரும்பினார். இலங்கை இந்தியர்கள் பிரஜா உரிமையை ருசுப்படுத்த சுலபமான நிபந்தனைகள் ஏற்பட வேண்டுமென்பதைப் பண்டித நேருவும் பலமாக ஆதரிப்பதாக ஜனாப் அஜீஸ் என்னிடம் சொன்னார். இதற்கிடையில் குடும்ப சம்ரட்சணத்துக்காக இந்தியாவுக்குப் பணம் அனுப்ப வேண்டியிருப்பவர்களின் அவசரத்தை அரசாங்கம் உபயோகித்து பர்மிட் கொடுப்பதற்கு முன் "நாங்கள் இந்தியர்கள்; இலங்கையில் நிரந்தரமாக வசிப்பவர்களல்ல!" என்று எழுதி வாங்கி வருகிறது. சுருக்கச் சொல்ல வேண்டுமானால் பணம் அனுப்புவதைக் கட்டுப் படுத்தும் செலாவணிக் கட்டுப்பாடு பிரஜா உரிமைக் கட்டுப்பாடாக மாறி காட்சி யளிக்கிறது.



கடைக்காரன்:—இந்த ஸோப்பை வாங்கிக் கொள்ளுங்கள்: இது பேபி விமலா உபயோகிக்கிற ஸோப்புங்க.

பெண்மணி:—இன்றெத்தர் உபயோகிக்கிற பழைய ஸோப்பு வேண்டாங்க. வேறே புதுசா ஒன்று எடுங்க!

## பாரபட்சம் ஏன்?

பார்லிமெண்டில் தாய் பாஷைகளிலே பேச அனுமதிக்க வேண்டுமென்று நீண்ட காலமாகக் கிளர்ச்சி நடத்தி வந்த தன் பலனாக சபாநாயகர் இப்பொழுது ஒரு உத்தரவு போட்டிருக்கிறார். 'ஒவ்வொரு நாள் கூட்டத்திலும் இரண்டு பேர்கள் சிங்களத்தில் பேச அனுமதிக்கப்படுவார்கள். அவர்களும் மொத்தம் கால்மணி நேரத்துக்கு மேல் சிங்களத்தில் பேசக்கூடாது. சிங்களத்தில் பேசப் போவதைப் பற்றி இருபத்திநான்கு மணி நேரத்துக்கு முன்பே அறிவித்துவிட வேண்டும். தற்சமயம் தமிழில் பேசுவதை அனுமதிப்பதற்கில்லை'—இது தான் சபாநாயகர் உத்தரவு. தமிழும் சிங்களமும் இலங்கையின் தேசிய பாஷைகள். இரண்டும் ராஜாங்க பாஷைகளாக அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. அப்படியிருக்க, சிங்களத்துக்கு மட்டும் சலுகை ஏன்? தமிழை இவ்விதம் அவமதிப்பானேன்? ஏன் இந்தப் பாரபட்சம்?




"வளையல் வாங்கலையோ! வளையல், வளையல்" என்று கூவிக்கொண்டு, தலையில் வளையல்கள் நிறைந்த ஒரு பெட்டியையும் தோளில் பளிச் பளிச்சென்று மின்னும்படியாகத் தினுசு தினுசான நிறங்களில் கயிறுகளில் கோத்த வளையல்களையும் சுமந்துகொண்டு, சோல் போட்டால் பொரியும் அந்த வெய்யிலில் வளையல்கார வையாபுரி தள்ளாடித் தள்ளாடித் தெருத் தெருவாகப் போய்க் கொண்டிருந்தான். பொறுக்க மாட்டாத வெய்யிலின் கொடுமையால் காக்கை குருவிகூடத் தெருக்களில் தென்படவில்லை.

வெய்யிலின் கொடுமை ஒரு பக்கம் தாக்க, நெஞ்சு உலரும் தாகம் ஒரு பக்கம் உந்த [illegible] வையாபுரி எங்காவது நிழலில் ஒரு வீட்டுத் திண்ணையில் சற்று இளைப்பாறலாம் என்று எண்ணினான். அவனுடைய எண்ணத்தை அறிந்ததுபோல் ஒரு குரல் "ஏ, வளையல்! ஏ வளையல்காரா! இங்கே கொண்டாப்பா" என்று மதுரமாக மொழிந்தது. அந்தக் குரலில்தான் எத்தனை ஆனந்தத்தைக் கண்டான் வையாபுரி! சித்திரை, வைகாசிக் கடும்பகலில் பாலைவனத்தில் திக்குத் திசை தெரியாமல் தவித்துக் கொண்டிருக்கும் வழிப்போக்கனொருவன் பசும் புல்வெளி யொன்றைக் கண்டால் என்ன ஆனந்த மடைவானோ அதற்கு மேல் ஒருபடி அதிக சந்தோஷத்தையும் சக்தியையும் அளித்தது அவ் வின்னிசைக் குரல். அக் குரல் வந்த திசையை நோக்கி ஆவலுடன் வையாபுரி தன் பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கையிலேயே, "இங்கேதான், கொண்டாப்பா" என்றவாறு ஒரு பெண் உருவம் ஒரு வீட்டு ஜன்னலிலிருந்து சற்றுத் தலையை நீட்டியது.

"அப்பாடா, என்ன வெய்யில்! என்ன வெய்யில்!" என்று ஒரு பெரிய கொட்டாவி விட்டுக்கொண்டே வையாபுரி அந்த வீட்டுத் திண்ணையில் தன் சுமக்க முடியாத சுமையைக் கீழே இறக்கி வைத்தான். சுமார் பதினாறு, பதினேழு வயது மதிக்கக் கூடிய ஒரு பெண் அவன் முன்னே வந்து நின்றாள். பச்சைக் கரை போட்ட ஒரு ரோஜா நிறப் புடவை தந்தப் பதுமை போன்ற அப் பூம்பாவையின் தேகத்தை அலங்கரித்தது. அவளது வட்டக் கரு விழிகளில் மை தீட்டி யிருந்தது. காதுகளிலும், எடுப்பான மூக்கிலும் வைரங்கள் ஜொலித்தன. நீண்ட கூந்தலை அழகாக வாரிக் கோணல் மாணல் இல்லாமல் நேர் வகிடு எடுத்துச் சாட்டைபோல் பின்னித் தொங்கவிட்டிருந்தாள். தலையில் மல்லிகை மொக்குகளைப் பாங்காகச் செருகியிருந்தாள்.

அவளைக் கண்டவுடன் வையாபுரியின் மனதிலே சொல்ல முடியாத ஒருவகை அன்பும் பாசமும் ஆசையும் பொங்கியது. ஆனால் வையாபுரியை முற்றிலும் கவர்ந்தது அப் பெண்ணின் தளிர் போன்ற கைகள்தான். வையாபுரி எத்தனையோ

அழகான கைகளில் வளையல்கள் போட்டிருக்கிறான். இதே தொழிலில் தலை மயிர் கன்னங் கரேலென்று இருந்த நாளிலிருந்து வெள்ளை வெளேரென்று நரைக்கும் நாள்வரை எத்தனையோ கட்டழகிகளின் கரங்களைத் தீண்டியிருக்கிறான். ஆனால் அவன் உள்ளத்தை அவ்வளவு தூரம் கொள்ளை கொண்டு மயக்கித் தடுமாறும்படிச் செய்த கைகளை அதுவரை கண்டதில்லை. இது போன்ற



தெய்வீகக் கரங்களைத்தான் இத்தனை நாள் வையாபுரி தேடிக் கொண்டிருந்தான் போலும்! வந்த வேலையை மறந்து அந்த மங்கையின் மலர்க் கரத்தின் எழிலில் மனதைப் பறிகொடுத்துச் சிந்தனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான்.

"என்னப்பா, என்ன? வெயிலில் வந்த களைப்பா! எடு, பார்க்கலாம் அந்த 'ஐஸ் கிரீம்' வளையலை" என்று அந்தப் பெண் அதட்டிய பிறகுதான் அவனுக்குத் தன் நினைவு வந்தது.

"மன்னிச்சுக்கோ, தாயே! இந்தப் பொல்லாத வெயிலில் கிழவனாகிய என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை, அம்மா! தந்தம் போன்ற உன் உடம்புக்கு அந்த வளையல் எல்லாம் நல்லா யிருக்காது. அந்தப் பச்சைக் கரைக்கு ஏற்ற நல்ல இளப் பச்சை வளையலாகப் போடுகிறேன், என்ன?" என்றான் வையாபுரி.

மாலதியின்— அதுதான் அந்த அழகியின் பெயர்—முகம் நாணத்தால் சிவந்தது.

"அந்த ஐஸ்கிரீம் வளையலைக் கொடுத்தால் கொடு. இல்லாவிட்டால் உன் வளையலே வேண்டாம்" என்று சற்றுக் கோபம் தொனிக்கும் குரலில் கடுகடுப்பாகக் கூறினாள் மாலதி.

"கோவிச்சுக்காதே, அம்மா!—சரி, உன் இஷ்டம். இப்படிக் கையை நீட்டு" என்றான் வளையல்காரன்.

மாலதி திரு திரு என்று விழித்துச் சுற்றுமுற்றும் பார்த்தாள். முன் பின் சற்றும் பரிச்சயமில்லாத ஓர் அன்னியன் தன் கரத்தைத் தீண்டலாமா, தீண்டக் கூடாதா என்ற பிரச்னை அவள் மனத்தில் திடீரென்று எழுந்தது. உடனே வளையல்காரனை நோக்கி "வளையலைக் கொடு. நான் போட்டுக் கொள்கிறேன்" என்றாள் மாலதி.

"என்ன அம்மா இது? வழக்கமில்லா வழக்கம்! பரம்பரையாக வளையல் விற்கும் தொழிலில் வந்தவன். எங்கள் பரம்பரை வழக்கப்படி ராஜகுமாரியானாலும் சரி, நாங்கள் தொட்டுத்தான் வளையல் போடுவோம். இஷ்டமானால் சொல்லுங்க. இல்லையானால் போகிறேன்" என்று ஆத்திரம் பொங்கக் கண்டிப்பாகப் பேசினான் வையாபுரி.

மாலதி ஒரு நிமிஷம் யோசித்தாள். வளையல்காரனோ தொண்டு கிழவன். அந்த 'ஐஸ்கிரீம்' வளையல் தான் எத்தனை அழகு! அதை விடவும் மனம் வரவில்லை. ஆகையால் ஒரு தீர்மானத்துக்கு வந்தவள் போல், முகத்தை அப்புறம் திருப்பிக் கொண்டு "வளையல்காரா? இந்தா, சீக்கிரம் போட்டு விடு. ஜல்தி!" என்று கையை நீட்டினாள்.

வையாபுரி மாலதியின் கரத்தைத் தொட்டான். மாலதி வலி பொறுக்க மாட்டாமல் முகத்தைக் கோணிக் கொண்டும், நாணிக் கொண்டும் வையாபுரியைப் படாத பாடு படுத்தி விட்டாள்.

"கொஞ்சம் பொறுத்துக்கோ, அம்மா! வளையல் போட்ட பிறகு உன் கையைப் பார்! என்ன அழகாக இருக்கும் தெரியுமா?" என்று பச்சாத்தாபமும் கேலியும் கலந்த குரலில் பேசினவாறே இரண்டு கைகளிலும் வளையல்களை அடுக்கி விட்டான்.

ஒன்றிரண்டு கண்ணீர்த் துளிகள் விழலாமா, வேண்டாமா என்பவை போல் மாலதியின் கண்களின் ஓரத்தில் தேங்கித் தயங்கிக் கொண்டிருந்தன. சின்னக் குழந்தையைப்போல, இந்த வலியைக் கூடப் பொறுக்க மாட்டாமல் அழ முற்பட்டு விட்டோமே யென்ற நாணத்தால் அவளுடைய முகம் மறுபடியும் சிவந்தது. வையாபுரியும் ஏதோ தன் வாழ்நாளில் மிக முக்கியமான ஒரு காரியத்தைச் சாதித்துவிட்ட பெருமிதத்துடன் தன் மூட்டைகளைச்

சரிப்படுத்திக் கட்டிக் கொண்டு புறப்பட ஆயத்தமானான்.

"இந்த வளையலுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும்?—இந்தா, இந்த ஐந்து ரூபாய் நோட்டுக்குச் சில்லறை கொடு" என்றாள் மாலதி.

"நான் விலைக்கு வளையல் விற்க இங்கே வரவில்லை. இது உனக்கு என்னுடைய மனப்பூர்வமான காணிக்கை அம்மா!" என்று சொன்ன வண்ணம் இன்னும் சில அழகான வளையல்களை மாலதிக்கு முன்னால் வைத்து விட்டு மட மட என்று வீட்டுப் படிக்கட்டுகளில் இறங்கி விட்டான்.

இதற்குள் மாலதியின் தாயார் சமாசாரம் கேள்விப்பட்டு ஓடோடியும் வெளியே வந்து "ஏ வளையல்காரா, நில்! போகாதே! இந்தா, காசை வாங்கிக் கொண்டு போ!" என்று வையாபுரியை வற்புறுத்தினாள். ஆனால் அங்கே வையாபுரி இருந்தால்தானே பதில் சொல்ல! சடுதியில் வீட்டை விட்டுத் தெருவில் இறங்கி "வளையல் வாங்கலையோ, வளையல், வளையல்!" என்று கூவினவாறே தெருக்கோடியில் மறைந்து விட்டான்.

வையாபுரி, தினந்தோறும் அதே நேரத்துக்கு அத் தெருவுக்கு வர ஆரம்பித்தான். மாலதியும், சொல்லி வைத்தாற்போல் வீட்டு ஜன்னலண்டை நின்று கொண்டு அவன் வரவை எதிர்பார்த்து வந்தாள். அவளையறியாமலேயே வையாபுரியின் வயோதிகக் கண்கள், அந்த ஜன்னலை நோக்கிக் காந்தத்தால் இழுக்கப்பட்ட இரும்புபோல் தாவும். வையாபுரியைக் கண்டவுடன் மாலதி 'களுக்' என்று சிரிப்பாள். உடனே குழி விழுந்த வையாபுரியின் கண்களில் சற்றுப் பிரகாசம் உண்டாகும். இவ்வாறாக நாளடைவில் அவர்களிடையே ஒருவித பாசம் வளர்ந்து வந்தது. ஒரு நாள் மாலதியின் தரிசனம் கிடைக்காவிட்டாலும் வையாபுரிக்குத் தூக்கம் வராது. மாலதிக்கும் வையாபுரியை ஒரு நாள் பார்க்காவிட்டால் அன்று ஏதோ ஒன்று குறைபட்டதாகத் தோன்றும். இருவருக்கு மிடையே அவ்வளவு பாசம் வளர்ந்தது.

நாட்கள் ஓடி பல மாதங்களாக மறைந்தன. நாள் தவறாமல் வையாபுரி அந்தத் தெருவிற்கு வந்துகொண்டிருந்தான். ஆனால் என்ன காரணத்தாலோ, மாலதியின் மதிவதனமும், புன்னகையும் அந்த ஜன்னலிலிருந்து மறைந்து விட்டன. மாலதியை எப்படியாவது பார்க்க வேண்டுமென்று வையாபுரியின் மனம் துடியாய்த் துடித்தது. ஆனால் ஒரு காரணமுமின்றி அவ்வீட்டுக்குள்ளே போய் விசாரிக்க அவனுக்குத் தைரியமில்லை. அநேக நாட்கள் அந்த வீட்டு வாசலில் நின்றுகொண்டு "வளையல் வாங்கலையோ, வளையல், வளையல்!" என்று தொண்டை கிழியச் சத்தம் போடுவான். சில சமயங்களில் பதிலே வராது. சிற்சில சமயங்களில் "ஏண்டா, பிராணனை வாங்கறே? வளையல் வேணும்னுக் கூப்பிடுவார்கள். போ" என்ற பதில்தான் கிடைக்கும்.

ஒருநாள் வையாபுரி வந்தது வரட்டும் என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு, மாலதியின் வீட்டுக்குள் நுழைந்து, அவளுடைய க்ஷேம லாபங்களைப்பற்றி விசாரித்தான். விசாரித்ததில் மாலதி விவாகமாகிப் புக்ககம் போய் விட்டதாகத் தெரிந்தது.

## முன் ஜாக்கிரதை!

"டாக்டர், இதென்ன! என்னுடைய சட்டைப் பையில் ஸ்டெதஸ்கோப் வைத்துப் பார்க்கிறீர்கள்?"

"பொறு, அவசரப்படாதே! முதலாவதாக உன்னுடைய மணிபர்ஸின் நாடி எப்படி இருக்கிறது என்பதைப் பார்த்துக்கொள்ளுகிறேன்!"

# அவன் கவலை



தோட்டக்காரன்:—இந்த மழை இப்படி விடாமல் பெய்கிறதே! சற்று மழை நின்றால் அல்லவா நான் செடிக்குத் தண்ணீர் ஊற்ற முடியும்?

---

மாதங்கள் கழிந்து வருஷங்களாயின. ஒரு நாள் வையாபுரி தோளில் வளையல் பெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். அப்பொழுது நல்ல வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது. ஆனால் மாலதியின் வீடிருந்த தெருப்பக்கம் வையாபுரி அடி யெடுத்து வைத்ததும் மழை பெய்ய ஆரம்பித்து விட்டது.

மாலதியின் வீட்டண்டை வந்ததும் வையாபுரியின் கண்கள் மலர்ந்தன. ஒரு காலுமில்லாத திருநாளாக, மாலதியின் தாயார் வீட்டுத் திண்ணையில் நின்றுகொண்டிருந்தாள். வையாபுரி தயங்கியபடியே நின்றான். சில நிமிஷங்கள் இருவரிடையேயும் மௌனம் நிலவியது. பிறகு மாலதியின் தாயார் வையாபுரியை நோக்கி "வளையல் வேண்டாம் என்று எத்தனை தடவை சொன்னாலும், திரும்பத் திரும்ப ஏன் இங்கே வந்து என் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறாய்?" என்று சோகமும், கோபமும், அர்த்தபுஷ்டியும் கலந்த குரலில் பேசினாள்.

ஏன் இவ்வளவு பட படப்புடன் தன்னைக் கடிந்து கொள்கிறாள் என்பது வையாபுரிக்கு விளங்கவில்லை. சில விநாடிகள் சும்மா இருந்து விட்டு வையாபுரி பேச ஆரம்பித்தான்.

"நான் வளையல் போடுவதற்காக இங்கே வரவில்லை. என் அருமைத் தாயைப் பார்த்து மூன்று வருஷங்களுக்கு மேலாய் விட்டது. இந்தப் பாவி கண் மூடுவதற்குள், மறுபடியும் ஒருதரம், கடைசி முறையாக, என் அழகுத் தெய்வத்தைக் கண் குளிரக் காணவேண்டுமென்று ஏழை உள்ளம் துடிக்கிறது. அவ்வளவுதான்!" என்று கெஞ்சினான். அவன் கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் அவன் கன்னத்தில் வழிந்தன. கிழவனின் கலங்கிய கண்களையும், அளவில்லா வாஞ்சையையும் கண்ட மாலதியின் தாயார், உடனே "மாலதி, சற்று இங்கே வா" என்று உள்ளே யிருந்த தன் பெண்ணைக் கூப்பிட்டவாறே தன் புடவையின் முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

வையாபுரி கண்ட காட்சி அவன் இருதயத்தைச் சேர்ந்தாற்போல் நூறு ஈட்டிகளால் தாக்கிய உணர்ச்சியைக் கொடுத்தது. மாலதியின் கைகளில்—அதைத் தான் வையாபுரியின் கண்கள் முதலாவதாக நோக்கின—அந்த ஜன்ஜிரீம் வளையல்களைக் காணோம். ஏன்? ஒரு வளையலும், ஒரு அலங்காரமும் இல்லாமல் கைகள் சோபையற்று விளங்கின. மூக்கிலும், காதுகளிலும் பிரகாசித்துக் கொண்டிருந்த வைரங்களைக் காணோம். நெற்றியில் திகழ்ந்த திலகமெங்கே? முகத்தில் சதா தவழ்ந்து கொண்டிருந்த புன்னகை மறைந்தது எப்படி? அழகான ரோஜா நிறப் பட்டுப் புடவை அலங்கரித்த அதே உடலை, இன்று ஒரு வெள்ளைப் புடவை மறைத்துக் கொண்டிருந்தது. சொல்லொணாத் துக்கம் வையாபுரியின் தொண்டையை அடைத்துக் கொண்டது. மடை திறந்த நதி போல், கண்கள் நீரைப் பெருக்கின.

"இந்த விதவைக் கோலத்தைப் பார்ப்பதற்காகவா நான் இத்தனை நாள் ஆவலுடன் காத்திருந்தேன்!" என்று தலையிலும் மார்பிலும் அடித்துக் கொண்டான்.

சற்று நேரம்வரை அப்படியே உட்கார்ந்திருந்தான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல எழுந்து, "என் அருமைத் தாய்க்கு வளையல் போட்ட கையால் இன்னொருவருக்கு வளையல் போடுவதில்லை. இன்றிருந்து, இந்த நிமிஷத்திலிருந்து, நான் வளையல் வியாபாரம் செய்யப் போவதும் இல்லை" என்று சொல்லிக்கொண்டே தன்னிடமிருந்த வளையல் பெட்டிகளை எடுத்து, வெகு ஆத்திரத்துடன் கீழே போட்டான். அவை ஆயிரம் ஆயிரம் சுக்கல்களாக உடைந்து சிதறின.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 220. கணையாழியா அது!

“இலங்கை என்று ஒரு தீவு உண்டென்பதே ராமனுக்குத் தெரியாதே. ராமன் இங்கு வருகிறதாவது, ஒன்றுவது! இங்கேயே மடிய வேண்டியது தான் என் கதி” என்று கையற்ற நிலையிலிருந்த சீதை ராமன் பெயரையே பொறித்த கணையாழியைக் கண்டு விட்டாள். அவளுக்கு வந்த சந்தோஷத்தை இப்படி அப்படி என்று சொல்ல முடியுமா? ஆனாலும் கவிஞர் சொல்ல முற்படுகிறார்.

***

நீதி வரம்புக்குப் புறம்பாய் நடக்கிறவர்கள் சுகமாய் வாழ்கிறார்கள் என்று சொல்ல முடியாது. சதா பயந்தான்; கவலைதான். திருடுதலையே தொழிலாகக் கொண்ட மக்களது வாழ்க்கையில் சுகமில்லை என்பது தெரிந்த விஷயம். அப்பேர்ப்பட்டவர்களுக்குத் தொழில் செய்ய இடம் கிடைத்து வாழ்க்கையை ஒழுங்கான முறையில் நடத்த சந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டால் வாழ்க்கையில் இன்பத்தையே கண்டுவிடுகிறார்கள். மக்களாய்ப் பிறந்த பயனை அப்போது தான் அடைகிறார்கள். [இறந்தனர்—நீதி வரம்பு கடந்து அக்கிரமத் தொழிலில் இருப்பவர்கள்.]

**சந்தம்**

**தான தன தன்ன தன**
**தனன தன தன்ன**

இறந்த னர்பி றந்த பயன்
எய்தி னர்கொல் என் கோ?

மறந்த னர்அ றிந்து ணர்வு
வந்த னர்கொல் என் கோ?

துறந்த உயிர் வந்தி டை
தொடர்ந்த துகொல் என் கோ?

இறந்தெ ரிவ(து) என்னை கொல் இந்
நல்நு தலி செய் கை!

[மறந்தனர் அறிந்துணர்வு வந்தனர்கொல்: ஒருவர் கீழே விழுந்துவிட்டார்; தரையில் மோதிவிட்டது அவர் தலை. மூளை அதன் காரணமாகக் கலங்கிவிட்டது. பித்துப் பிடித்தவர்போல ஆகிவிட்டார். வாழ்க்கையில் ஒரு அம்சமும் ஞாபகத்தில் இல்லை. இப்படியாக ஒரு வருஷத்துக்கு மேலே கழிந்தது. அவரிடம் ஒருவர் வந்து ஒரு துயரமான சமாசாரத்தைச் சொன்னார். அந்தச் சமாசாரம் அவர் மனசை ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. ஞாபக சக்தி வெல்லாம் திருந்தி விட்டது. குடும்பக் காரியங்கள் எல்லாம் ஒன்று பாக்கியில்லாமல் ஞாபகத்துக்கு வந்து விட்டது. அவரும் அதை உணர்ந்தார். அப்படி உணர்ந்தபோது என்ன திருப்தி உண்டாகியிருக்கும் என்று நாம் ஊகித்துக் கொள்ள வேண்டும். சீதையின் நிலை, அப்படியிருந்தது.

துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது கொல் என்கோ:

வியாதியாக் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கு உயிர் போய் விட்டது. எல்லாரும் தீர்ந்த காரியம் என்று எண்ணி விட்டார்கள். அப்போது வைத்தியர் வந்து இதயத்துக்கு ஒரு தாக்குதல் கொடுத்தார். அவ்வளவுதான். இதயம் துடிக்க ஆரம்பித்து விட்டது. உயிரே வந்துவிட்டது—பிழைத்தார். அப்படிப் பிழைத்தவருடைய மனநிலையை வைத்துச் சீதையின் நிலையைப் பார்க்க வேண்டும்.

இறம் தெரிவது என்னைகொல் இந்நல் நுதலி செய்கை: சீதையின் தன்மையை எப்படித் தேர்ந்து சொல்லுவது என்று திகைக்கும்படியாக இருக்கிறது.]

***

கணையாழியைக் கையில் வாங்கிக் கொண்டாள். அதை என்ன செய்கிறாள் பாருங்கள்.

மோந்து பார்க்கிறாள். பிறகு மார்போடு வைத்து அணைக்கிறாள். கண்ணில் ஆனந்தக் கண்ணீர் நிறைகிறது. அதை நீக்கிவிட்டு ஒரே படியாய் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டே

இருக்கிறான். ஏதோ வார்த்தை சொல்ல எண்ணுகிறான். எண்ணுவது இதழ் குவிதலில் தெரிகிறது. ஆனால் வாயினின்று வார்த்தை ஒன்றும் வெளி வரவில்லை.

மோக்கும், முலை வைத்து ற
முயங்கும், ஒளிர் நன் னீர்
நீக்கி, நிறை கண்ணி ணை
ததும்ப நெடு நீ ளம்
நோக்கும், நுவ லக்கரு தும்
ஒன் றும் நுவல் கில் லான்,
மேக்கு நிமிர் விம்ம லன்
விழுங்கல் உறு கின் றான்.

[நிறை கண்ணிணை ததும்ப நெடு நீளம் நோக்கும்: விசாலமான இரண்டு கண்களும் வெளியே வந்து விடுமோ என்று எண்ணும்படி வெறித்துப் பார்க்கிறான். அப்படியே நெடுநேரம் பார்த்துக் கொண்டே இருக்கிறான்; மேக்கு நிமிர் விம்மலன்: மேலே மேலே விம்மிக் கொண்டே போகிறான்; விழுங்கல் உறுகின்றான்: கடைசியாக விழுங்குகின்றான்—ஏதோ உணர்ச்சியை விழுங்குகிற மாதிரி.

குறிப்பு: விழுங்குதல்: சோகத்தில் நிகழும் உண்மையான நிகழ்ச்சி.]

***

சந்தோஷம் காரணமாக அவனது உடலே பூரித்தமாதிரி யிருக்கிறது.

ஆற்றுக்குள் ஒரு மண்டபம். அதில் ஒரு நாள் இரவு படுத்திருந்தான் ஒருவன். திடீரென்று மலையில் அமோகமாய் மழை பெய்த காரணத்தால் பெரு வெள்ளம் இரு கரையையும் தொட்டு வந்துவிட்டது.

மண்டபத்தில் படுத்திருந்தவன் விழித்துப் பார்த்தான். நாலா பக்கமும் ஒரே வெள்ளமாக இருந்தது. நீந்திக் கடக்க முடியாத அபாயமான வெள்ளம். கரையிலுள்ளவர்கள் அவனைப் பார்த்து அனுதாபப் பட்டார்களே ஒழிய எந்த விதத்திலும் உதவி செய்ய முடியவில்லை. இரண்டு நாட்கள் கழிந்தன. வெள்ளம் குறைய வில்லை. அந்த வேளை ஒரு பித்தளைப் பாத்திரம் வெள்ளத்தில் மிதந்து வந்து கொண்டிருந்தது. மண்டபத்தை முட்டியது. அவன் அப்படியே ஓடிப் போய் அதை எடுத்தான். அதில் நல்ல பக்குவமாக சாப்பாடு தயார் செய்து வைத்திருந்தது. (மேலே ஒரு தோப்பு. அந்தத் தோப்பின் முதலாளி ஒருவருக்காக வைத்திருந்த சாப்பாட்டை வெள்ளம் அடித்துக்கொண்டு வந்து விட்டது) சாப்பாட்டைக் கையில் எடுத்த அந்த மனுஷனுக்கு என்ன ஆனந்தம் உண்டாகும் என்று எடுத்துச் சொல்லவும் வேண்டுமா?

இருந்து பசி யால்இ டர்
உழந்த வர்கள் எய் தும்
அருந்தும் அமு தாகி ய(து);
அறந்த வரை அன் றும்
விருந்தும் என லாகி யது
வியும் உயிர் மீ ளும்
மருந்தும் என லாகி யது
வாழி மணி ஆ ழி!

[அறந்தவரை அன்றும் விருந்தும் எனலாகியது: தர்மம் செய்து பழகியவர்களுக்கு விருந்தாளி என்று. உடன் உண்ண நண்பர்கள் இல்லாமற் போனால் கஷ்டந்தான். ஆகாரம்கூடச் சரியாக இறங்காது. அப்படிப் பட்டவர்களுக்கு நெடுநாள் விருந்தினர் இல்லாமல் கடைசியில் ஒரு நாள் விருந்தினர் வந்துவிட்டால் எப்படி யிருக்கும்?—அப்படி யிருந்தது; வியும் உயிர் மீளும் மருந்தும் எனலாகியது: போகும் உயிரை மீட்டுக் கொடுக்கும் அரிய மருந்து என்றும் சொல்லலாம்—எது? வாழி மணி ஆழி: அழியாச் செல்வமான அந்த அழகிய கணையாழி.]

சீதையின் நிலை அசோக வனத்தில் நம்பிக்கை அற்ற நிலையில்தான் இருந்தது.

ராம லக்ஷ்மணர்கள், தான் இருக்கும் இடத்தைக் காணவே முடியாது. பிறகு மீட்பது என்பது ஏது? இதயம் உடைந்த இந்த நிலையில், ராமனுடைய விரலை அலங்கரித்துள்ள கணையாழியே ஒரு அடையாளமாகத் தன் கையில் வந்து அமருவது என்றால் சாமான்ய காரியமா! அது அளித்த ஆனந்தத்தை அளவிடத்தான் முடியுமா? சீதையை அந்த ஆனந்த நிலையில் கவிஞர் கண்ணாரக் கண்டு நமக்கு எடுத்துச் சொல்லுகிறார். செய்யுளே நம்மிடம் பேசுகிறது.

# வட்ட மேஜை

★

விருதுநகர்
26—7—48

## பிளாட்பாரத்தில்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

ஒருநாள் விருதுநகரிலிருந்து புறப்பட்டு வந்த ரயில்வண்டி காலை 9 மணிக்கு மதுரை ஸ்டேஷனில் 4-வது பிளாட்பாரத்தில் வந்து நின்றது. ஏராளமான ஜனங்கள் மூட்டை, முடிச்சு, பெட்டி முதலியவற்றுடன் 4-வது பிளாட்பாரத்தில் இறங்கினார்கள். இவர் 2-வது லைனைக் கடந்து 3-வது பிளாட்பாரத்தை அடைந்தார்கள். அவர்களில் சூட், கோட் அணிந்திருந்த ஆடவர்களும் பெங்களூர், காரக்கி, பெங்களூர் ஸில்க் உடுத்தியிருந்த உத்தமிகளும் அங்கு அங்கு நின்று கொண்டிருந்த ரயில்வே போலீஸ்காரர்களின் கண்ணுக்குப் புலப்படவில்லை. ஆஸ்பத்திரிக்குச் செல்லும் ஆவுடையப்பனும், பருத்திக் கொட்டை வாங்கப்போகும் கருப்பனும், தலையில் கட்டுச் சோறும் இடுப்பில் பிள்ளையோடும் இறங்கிய இருளாயியும், கந்தைத் துணியோடு காட்சி அளித்த காத்தாயியும் தான் அந்தக் கான்ஸ்டேபிள் கண்ணுக்குத் தெரிந்தது. "ஏ! இங்கேவா. அடே! இப்படி நில். ஏ, பொம்பிளே! ஏன் லைனைக் கிராஸ் பண்ணினே? உங்களை அரெஸ்ட் பண்ணியிருக்கு" என்று சொல்லி அவர்களை நிறுத்தினார். விசில் சப்தம் கேட்டது. வேகமாக ஓடிவந்து லைனைக் கிராஸ் பண்ணி வண்டியில் ஏறினார்கள். வண்டியும் நகர்ந்தது. "ஏ, ஏ. நில்லு நில்லு" என்று கூறிக்கொண்டே வண்டியில் ஏறும் ஒரு மனிதனைப் பிடித்து அக்கான்ஸ்டேபிள் இழுத்தார். அவர் இழுக்க இவர் இழுக்க......அதைப் பார்க்க அலங்கோலமாக இருந்தது. பாவம்! படிப்பற்ற பாமர மக்கள் அன்று பரிதவித்தார்கள். இனிமேலாவது ரயில்வே சூப்பிரண்டெண்ட் அவர்கள் படித்தவர்கள், பார்க்கத் தக்கதாய் ஓர் அறிவிப்பு போர்டு எழுதி அதைப் பிரதான இடத்தில் தொங்கவிடுவார்களா? படியாதவர்கள் லைனைத் தாண்டிச்செல்லுவதற்கு முன்பே "அந்தப் பிளாட்பாரத்தில் இறங்கு; இப்படி நடக்காதே" என்று கான்ஸ்டேபிள் சொல்லித் தடுக்கும்படி உத்தரவு இடுவார்களா?

ஏ. எஸ். நர் ராஜம்மாள்.

திருப்பூர்
26—7—48

## விருத்தி ஆகுமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

"பொதுக்கல்வி" வேண்டுமென்று சொல்லுகிறார்களே, அதற்கு நூல் நிலையங்கள் தேவையல்லவா? எங்கள் ஊரில் இரண்டு நூல் நிலையங்கள் தான் இருக்கின்றன. அந்த நூல் நிலையங்கள் எங்கள் வீட்டிலிருந்து இரண்டு மைலுக்கு அப்பால் இருக்கின்றன. நான் பள்ளிக் கூடத்திலிருந்து வீட்டிற்கு வருவதற்குள் மணி 5-30 ஆகிறது. எப்படி நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகம் படிப்பது? எங்கள் பள்ளியில் லைப்ரரிக்குப் பணம் வாங்குகிறார்கள். ஆனால் இது வரையிலும் புத்தகம் கொடுக்கவில்லை. அப்படி நூல் நிலையத்தில் பணம் கட்டி வாங்கி வந்து படித்தாலும் வீட்டில் உள்ளவர்கள் "ஏண்டா, கடன்காரா, உன் புத்தகம் படிக்க உனக்கு வழியில்லை. லைப்ரரிப் புத்தகம் வேண்டியிருக்கோ?" என்கிறார்கள். இப்படி இருந்தால் பொதுக்கல்வி எப்படி விருத்தி ஆகும்?

ராமகாந்தன்.

பகவந்தலை
25—7—48

## ஆராய்ச்சியாளர் பெருக

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

சமீபத்தில் பம்பாய் மாகாண மதுவிலக்கு சபையார் 60 மணி நேரம் பதநீர் கெடாமலிருக்கும் பக்குவத்தைக் கண்டு பிடிப்பவருக்கு ரூ. 10,000 பரிசளிப்பதாகவும், நமது டெல்லி எண்ணெய் விதைக் கமிட்டியார், கிராமச் செக்கு ஒன்று கண்டு பிடித்து, ஒரே நடவையில் 20 ராத்தல் விதைகள் கொள்ளும்படியாகவும், ஒற்றை மாடு போட்டு ஓட்டியும் விலை ரூ. 200க்கு மேற் போகாமலும் எண்ணெய் எடுத்த பிறகு மீதி இருக்கும் பிண்ணாக்கில் 10 சத விகிதத்துக்கு மேல் எண்ணெய் போகக் கூடாததுமான ஒரு புது செக்கைக் கண்டு பிடிப்பவருக்கு ரூ. 500 வெகுமதி கொடுக்கப் போவதாகவும் தெரிகிறது. சபாஷ்! இது நல்ல யோசனை. பொதுவாக சர்க்கார் இவ்விதமான ஆராய்ச்சிகளையும் சோதனைகளையும் பொதுஜனங்களே கண்டு பிடிக்கச் செய்வது மிகவும் நல்ல காரியம். இந்த மாதிரியாக வேறு ஏதாவது கண்டு பிடிக்கும் காரியங்களைப் பொதுஜனங்களுக்கு விட்டு விட்டால், எத்தனையோ ஜனங்கள் ஆராய்ச்சித் துறையில் இறங்குவார்கள். அப்பொழுது போதுமான ஆராய்ச்சியாளர்கள் தோன்றுவார்கள். ஜனங்களுக்கும் நல்ல பயிற்சியாகும்.

ஏ. பி. குமார்.

சென்னை
25—7—48

## ரேடியோவும் மரீனாவும்

அன்புள்ள 'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

சென்னைக் கடற்கரையில் மரீனா பீச்சுக்கு நான் தினசரி மாலை நேரத்தில் போய் இருந்து விட்டு 9 மணிக்குத்தான் திரும்புவேன். மரீனா பீச்சில் மற்ற பீச்சுகளில் கூடும் ஜனக்கூட்டத்திற்கு மேல் ஆண்களும் பெண்களும் கூடுகிறார்கள். இந்த மரீனா பீச்சில் ஒரு ரேடியோ இருக்கிறது. இதற்கு இரண்டு வேலையாட்கள் இருக்கிறார்கள். மாலை 6 மணிக்கு ஒலி பெருக்கும் கருவியைக் கொண்டுவந்து பொருத்துகிறார்கள். அங்கே இந்தியச் செய்தி 7-30 மணிக்கு ஆரம்பமாகிறது. செய்தி முடிந்தவுடன் செய்தியைப் படிப்பவர் 'செய்திகள் முடிவடைந்தன; அடுத்த நிகழ்ச்சி' என்று சொல்லியும் சொல்லாமலும் இருக்கும்போதே வேலையாட்கள் ரேடியோவை நிறுத்திவிடுகிறார்கள். அடுத்த

நிகழ்ச்சிகள் இசைத் தட்டோ, பாட்டோ ஜனங்கள் கேட்க முடியாமல் போகிறது. இரவு 10 மணி வரை ஜனக்கூட்டம் இருந்தும் செய்தி முடிந்தவுடன் ரேடியோவை நிறுத்தி விடுவது ஜனங்களுக்கு வருத்தமாய் இருக்கிறது. இரவு 9 மணி வரையிலாவது மரீனா பீச்சில் ரேடியோ வேலை செய்தால் ஜனங்களுக்குச் சௌகரியமாயிருக்கும்.

எஸ் வி. சங்கையாத் தேவர்

பொன்னாச்சி
25—7—48

## புகை தொல்லையா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

பம்பாய் போலீஸ் இலாகா "சினிமாக் கொட்டகையில் புகை (Smoking) பிடிக்கக் கூடாது" என்று உத்தரவு போட்டதாக 22-7-48 தினப் பத்திரிகை ஒன்றில் செய்தி வெளியாகியிருந்தது. இந்த உத்தரவை நான் வரவேற்கிறேன். அந்தப் போலீஸ் இலாகாவை மனப்பூர்வமாக வாழ்த்துகிறேன்.

நம் ஊர்களில் சில சினிமாக் கொட்டகைகள் இருக்கின்றனவே! அவற்றின் நல்ல காலத்திலேயே புழுக்கம் சொல்லி முடியாது. "சுவாசத்திற்குச் சிறிது நல்ல காற்று வேண்டும்" என்று திரும்பினால் போதும். நாலா பக்கங்களிலிருந்தும் புகை மண்டலங்கள் தாக்கி நம்மை மூச்சுத் திணற அடித்துவிடும்!

அவஸ்தை பொறுக்காமல் அந்தப் புகையின் உற்பத்தி ஸ்தானத்தில் விண்ணப்பித்துக் கொண்டால் வந்தது ஆபத்து! எங்கோ சென்று கொண்டிருக்கும் "புகை" நம் முகத்திற்கு நேராகவே வந்து தாக்க ஆரம்பித்துவிடும்!!

சினிமா கொட்டகைகளிலாவது "புகை பிடிக்கக்கூடாது" என்று உத்தரவு போட்டால் ஜனங்கள் மூச்சுத் திணறாமலாவது படம் பார்க்க முடியும்.

டி. ஆர். சீனிவாசராவ்.

திருச்சி
16-7-48

## அம்சையும் அடிசிலும்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

இப்பொழுது சர்க்கார் வெளியிட்டிருக்கும் மத்தியதரக் கல்வி புதிய பாட நகல் திட்டத்தில் பெண் பாடசாலைகளில் சமையல் வேலை புகுத்தப்பட்டிருக்கிறது. அவரவர் குடும்ப அந்தஸ்துக்குத் தக்கபடி பாடசாலையிலேயே சமையல் செய்யப் பழக வேண்டுமாம். வீட்டில் சுலபமாய்ப் பழகக் கூடிய இவ்வேலையைப் பாடசாலையில் பழக வேண்டிய அவசியம்தான் என்ன? அதிலும் நாலாவது பாரம் முதல் கறிக்குழம்பும், மீன் புட்டும், கறிப் பொரியலும் சமையல் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மாமிசம் புசிக்காதவர்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருப்பினும் கட்டாய பாடமாகிய நீதி போதனை வகுப்பில் திருக்குறள் கொல்லாமை அத்தியாயத்தைப் படிக்கப் பிடித்த கையினால் கறிக்குழம்பு பாடசாலையில் காய்ச்சச் சொல்வது விந்தையான அம்சமே! இப்பொருத்தமற்ற அம்சத்தை திட்டம் முடிவு செய்வோர் கருணை கூர்ந்து விலக்குவது நலம்.

ஜீ. கிருஷ்ணமூர்த்தி

காமநாயக்கன்பட்டி
9—7—48

## நியாயமாகுமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

என்னுடைய கிராமமாகிய காமநாயக்கன்பட்டியிலுள்ள ரோமன் கத்தோலிக்க மதகுருவின் மானேஜ்மெண்டுக்குட்பட்ட எலிமெண்டரி பாடசாலையில் என்னுடைய பிள்ளைகளாகிய எட்டு வயதுள்ள தேவசகாயமும் ஆறு வயதுள்ள பெஞ்சமினும் மூன்றாம் வகுப்பிலும், நாலரை வயதுள்ள வின்சியம் முதல் வகுப்பிலும் படித்து வந்தார்கள். 8—7—48 மாலை மூன்று சிறுவர்களும் 'ஹெட்மாஸ்டர் எங்களை ஸ்கூலை விட்டு டிஸ்மிஸ் செய்துவிட்டார்' என்று அழுது கொண்டு வந்தார்கள். நான் உடனே ஹெட்மாஸ்டரிடம் சென்று 'என்ன சங்கதி?' என்று கேட்டேன். அதற்கு அவர் கழுத்தில் சுரூபம் அணியாத பையன்களையும் தினசரி காலை 5 மணிக்கும் மாலை 7-30 மணிக்கும் கோவிலில் ஜபத்திற்கு வராத பையன்களையும் டிஸ்மிஸ் செய்யும்படி மானேஜர் உத்தரவிட்டிருக்கிறார். உங்கள் பிள்ளைகளை மேலே கண்ட ஒழுங்கு முறைகளை அவர்கள் சரிவர அனுசரிக்காததால் டிஸ்மிஸ் செய்திருக்கிறேன் என்று சொன்னார்.

மேற்படி மானேஜராகிய மத குரு மேலே சொன்ன மத காரியங்களுக்காக வேண்டி என்னுடைய சிறு பையன்களை வேறு பள்ளிகளில் சேர்க்க முடியாத இந்தக் காலத்தில் பள்ளிக்கூடத்தை விட்டு டிஸ்மிஸ் செய்திருப்பது நியாயமா?

டி. சகாயம் நாடார்

தனுஷ்கோடி
20—7—48

## கஷ்டம் தீருமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

ராமேசுவரத்துக்கும் தனுஷ்கோடிக்கும் உள்ள தூரத்தை யாத்திரீகர்கள் கடல் வழியாய்க் கடப்பார்கள். இதற்குக் கட்டணம் அணா எட்டுத்தான். ஆனால் சென்ற பத்து நாட்களாகக் கடல் வழியாய்ப் போய்வர வசதியில்லை. ஏனென்றால் சர்க்கார் கடல் வழியாய் பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் படகுகளைத் தடுத்து விட்டார்கள்.

முன்பு ராமேசுவரத்திற்கும் தனுஷ்கோடிக்கும் நீராவிப் படகும், காற்றினால் தள்ளிச் செல்லப்படும் படகும் ஓடிக்கொண்டு இருந்தன. முதலில் நீராவிப் படகுக்கு அனுமதி நிறுத்தப்பட்டது. பிறகு காற்றினால் தள்ளிச் செல்லப்படும் படகுக்கும் அனுமதி நிறுத்தப்பட்டது.

தற்போது ராமேசுவரத்திலிருந்து தனுஷ்கோடிக்கு ரயில் மூலம்தான் வரமுடியும். ரயில் மூலம் வருவதாயிருந்தால் ராமேசுவரத்தில் காலை 3 மணிக்குப் புறப்பட்டு பாம்பனில் சுமார் 1-15 மணி நேரம் காத்திருந்து தனுஷ்கோடிக்கு காலை 6-30 மணிக்கு வரமுடிகிறது. அப்படி வந்தாலும் சேதுவுக்கு சுமார் 3 மைல்கள், தனுஷ்கோடி ஸ்டேஷனிலிருந்து நடந்தாக வேண்டும். திரும்பி வரும்பொழுது கொதிக்கும் மணலில் ஜனங்கள் படும் கஷ்டம் சொல்லி முடியாது.

ஆகையால் சர்க்கார் முன்போல அந்தப் படகுகள் போய்வர அனுமதி கொடுக்க வேண்டும். அல்லது ரயில்வே அதிகாரிக

ளாவது ராமேசுவரத்திலிருந்து 3 மணிக்குப் புறப்பட்டு மதுரை செல்லும் வண்டிக்கு, பாம்பனிலிருந்து தனுஷ்கோடிவரை ஒரு புது வண்டியாவது விடவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சர்க்கார் படகுகளுக்கு அனுமதி கொடுத்தால் அது பலவிதத்திலும் பொது ஜனங்களுக்குச் சௌகரியமாயிருப்பதுடன், தனுஷ்கோடி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சேது வரைக்கூட இந்தப் படகு மூலம் பிரயாணம் செய்யலாம். ஜனங்கள் கொதிக்கும் மணலில் நடக்க வேண்டிய அவசியம் இல்லை.

வி. சுப்ரமணியன்.

மயிலாப்பூர்
8—7—48.

## வீட்டிலிருந்தே

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

இவ் வருஷம் 'S.S L.C. யில் சுமார் முப்பதாயிரம் மாணவர்கள் தேறியிருக்கிறார்கள். அவர்களில் பெரும்பான்மை யோர்க்கு 'காலேஜ்களில் இடம் இல்லை' என்ற விடையே கிடைத்திருக்கிறது. அவர்கள் அடுத்த வருஷம் மேல்படிப்பிற்காக காத்திருக்கலாம். ஆனால் காத்திருந்து என்ன பயன்? அடுத்த வருஷமும் இதே மாதிரி முப்பதாயிரம் பேர்கள் தேறி, போட்டிக்கு வருவார்கள். ஆதலால் அடுத்த வருஷம் காலேஜ்களில் சேருவது இரட்டிப்புக் கஷ்டமாகும். இதன் பயனாக மேல் படிப்புப் படிக்க விருப்பம் உள்ள சிலருக்கு அது சாத்தியமில்லாமல் போகிறது.

மத்திய மாகாணத்தில் ஒருவன் பள்ளிக்கூடத்திலோ காலேஜிலோ சேர்ந்து படிக்காமலேயே மெட்ரிக், இன்டர், பி.ஏ., எம்.ஏ., முதலிய பரீக்ஷைகளுக்குப் போகலாம். மெட்ரிக் தேறி இரண்டு வருஷங்கள் கழிந்து மறுபடியும் இன்டர் பரீக்ஷைக்குப் போகலாம். இப்படியாக ஒருவன் வீட்டிலேயே படித்தால், கல்லூரிகளுக்கு போகாமலேயே எவ்வளவு உயர்ந்த பரீக்ஷைகளானாலும் பாஸ் செய்யலாம். காலேஜில் சேர்ந்து படிக்க வசதி யில்லாதவர்களுக்கு, இது மிகவும் அநுகூலமாயிருக்கும். இதன் பயனாக எவ்வளவோ பேர்கள் மத்திய மாகாணத்தில் வேலையில் இருந்து கொண்டே மேன்மேலும் பரீக்ஷைகளில் தேறி உன்னத பதவி அடைந்திருக்கிறார்கள்.

இந்த ஏற்பாடு நம் சென்னை மாகாணத்திலும் இருக்குமானால், காலேஜ்களில் 'இடம் இல்லை' என்ற பேச்சு ஒழியும். மத்திய மாகாணத்தைச் சென்னை சர்க்கார் இவ்வழியில் பின்பற்றுவார்களா?

எஸ். பார்த்தசாரதி.

கும்பகோணம்
26—7—48

## வீடுதோறும்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

சென்னைக்கு, 'மனிதருள் மாணிக்கம்' நேருஜி வந்து மூன்று நாட்கள் தங்கினார். ஓ! பாழும் மனமே! ஏன் சென்னை வாசிகளைப் பார்த்து பொறாமைப் படுகிறாய்? உனக்கு கொடுத்து வைத்தது அவ்வளவுதான். கண்களே! ஒப்புயர்வற்ற உத்தமத் தலைவரைப் பார்க்க பாக்கியம் இல்லையே உங்களுக்கு. காதுகளே! செவிடாகுங்கள். ஜவாஹர்லால்ஜியின். அமுத மொழிகளை கேள்க் கேட்டு இன்புறக் கொடுத்துவைக்கவில்லை கைகளே! உத்தமத் தலைவருக்குக் கைகளை கூப்பி வணக்கம் செலுத்த நீங்கள் அதிர்ஷ்டம் செய்யவில்லை. ஆனால் ஜவாஹர், காரைக்குடியிலிருந்து சென்னை திரும்பிய விமானத்தையாவது கண்டீர்களே! நேருஜி விமானத்தில் இருந்தாரோ, என்னமோ தெரியாது. ஜனங்கள் ஆகாயத்தில் "டர்ர்" என்று சத்தம் கேட்டவுடனே மேலே பார்த்து, "நேருவே, நீங்கள் அப்படியே கீழே இறங்கி தரிசனம் தரமாட்டீர்களா?" என்று ஏங்கினார்கள். அப்போது சமய சஞ்சீவியாகத் தங்கள் 'கல்கி' ஜவாஹர் மலர் தென்றல் பூராவும், "ஜம்"மென்று சுற்றுப் பிரயாணம் செய்து, தலைவரைக் காணாது சோர்ந்த மக்களுக்கு மனச் சாந்தியையும் மன ஆறுதலையும் கொடுத்தது. இப்பொழுதுதான் எனக்கும் நிம்மதி. ஏனென்றால், கல்கி ஜவாஹர் எங்கள் வீடு, எங்கள் தெரு, எங்களூர் பூராவும் விஜயம் செய்து கொண்டிருக்கிறார்.

என். சாரங்கன்.

மதுரை
5—7—48

## ஸ்டிரைக்கைத் தடுக்க வழி

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

13—6—48 ந் தேதி கல்கி இதழில் தோழர் ராஜதுரை 'நாட்டுக்கு உழைப்போம்'' என்ற தலைப்பின் கீழ் ஸ்டிரைக் செய்யும் முறையைப் பற்றி எழுதியிருப்பதைப் பார்த்தேன். தொழிலாளிகள் தங்கள் கோரிக்கை நிறைவேறும் வரைச் சம்பளம் வாங்காது வேலைசெய்ய வேண்டுமென்றும் அப்படிச் செய்தால் பொதுஜன ஆதரவும், சர்க்காரின் ஆதரவும் தொழிலாளிகளுக்கு உண்டு என்றும் கூறுகிறார். தோழர் ராஜதுரை ஒரு தொழிலாளியாக இருந்தால் இப்படி எழுதியிருக்க மாட்டார். உழைத்து உழைத்து, உழைத்த பயனை அடையாது பட்டினி கிடக்க நேரும்போதுதானே அவர்கள் நிலைமை 'ஸ்டிரைக்' செய்யத் தூண்டுகிறது? தோழர் ராஜதுரை சொல்வது போல் செய்தால், முதலாளிகளுக்குத்தான் நிலைமை மிகவும் சௌகரியமாகப் போகும்.

உதாரணமாக, இவ்வூர் ராஜா மில் தொழிலாளிகளின் கோரிக்கை சர்க்காருக்குப் போய், 'அட்ஜூடிகேட்டர்' தீர்ப்பும் வந்தது. இந்தத் தீர்ப்பை முதலாளிகள் அமுல் நடத்தவே இல்லை. பிறகு, தங்களுக்கு லாபம் இல்லை என்று எட்டு மாதகாலமாக மில்லை மூடிவிட்டார்கள் மில் முதலாளிகள். இந்நிலையில் சர்க்கார் மேற்படி மில் முதலாளிகள் மீது வழக்குத் தொடர்ந்தார்கள். ஆனால் அந்த வழக்கு இப்போது என்ன ஆயிற்று என்பது கடவுளுக்குத்தான் தெரியும். தொழிலாளிகள் எட்டு மாத காலமாக வேலையின்றி தெருத் தெருவாய் அலைந்தார்கள்.

ஸ்டிரைக் வராமல் தடுப்பதற்கு, தொழிலாளியின் பிரதிநிதி, முதலாளியின் பிரதிநிதி சர்க்காரின் பிரதிநிதி இவர்கள் சேர்ந்த முக்கூட்டுக் கமிட்டியினால் தான் முடியுமே யொழிய வேறு எவ்விதத்திலும் முடியாது என்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

வி. நாகசுந்தரம்.

---

★ இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்ட மேஜைக் கடிதங்களில் விருதுநகர் எ. எஸ்தர் ராஜம்மாள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25—0—0 பரிசளிக்கப்பட்டது.






Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

# ஸ்ரீ ராஜேந்திரா மில்ஸ் லிமிடெட்,

சேலம்.

தந்தி: 'ராஜேந்திரா' :: டெலிபோன்: 45

**நூற்கும் கதிர்கள் 17,328**




ட்ரேட் மார்க்

•

மேல் கண்ட உதயசூரியன் ட்ரேட் மார்க் உள்ள 28, 30, 40, 2/28, 2/30 நம்பர் சிறந்த ஒத்தை இரட்டை நூல் ரகங்கள் தயாரிக்கப்படுகின்றன

தேவைக்கு எழுதக் கோருகிறோம்.

•

நிர்வாக கர்த்தர்கள்:

**தியாகராஜ செட்டி அண்ட் கம்பெனி லிமிடெட்.**




லோகல் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, ராயப்பேட்டை
மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும்
பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 62,00,000 |

எல்லாவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும்.

என். கோபால அய்யர், செக்ரடரி.

# தி இந்தியன் பாங்க் லிட்.,

தலைமை ஆபீஸ் : இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்,
நார்த் பீச் ரோடு :: மதறாஸ்.

NPB



## இடை இடையில் இயற்கைக்கு உதவுதல் இன்றியமையாதது !

தேகம் இயற்கையாக எச்சரிக்கும்போது சிரத்தை காட்டுவது அவசியம். தலை கலப்பதும், கண்கள் ஒளி யிழப்பதும், தேகத்தில் சுறுசுறுப்புக் குறைவதும், குடலிலுள்ள அசுத்தங்கள் சரீரவ பிரவிருத்தியாகாமல் இருப்பதனால் தான். போனோமின்ட் உட்கொள்ள வேண்டிய அவசியத்தை அறிவுறுத்துகிறது. கிரமமாக குடலை சுத்தி செய்துகொள்வது உங்கள் சுகவாழ்விற்கு இன்றியமையாதது என்பதை மறவாதீர்கள்.

சுத்தமாக மணமிக்கும் உன்னத [illegible]

ரூ. 1—2—0, ரூ. 0—7—0 ஆகிய இரு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள் :

ஓரியண்டல் மார்க்கண்டைல் ஏஜென்ஸி,
99-A, அரமனைக்காரத் தெரு, சென்னை

**BONOMINT**
**LAXATIVE**
**CHEWING GUM**

REGD. No. M. 4392

# எவர்ஸில்வர்
## பாத்திரங்கள்



வெகு நாட்களாக
எதிர்பார்த்த

டம்ளர்கள்
உயர அடுக்குகள்
பேஸின்கள்
கிண்ணங்கள்

இன்னும் பல புதிய
மாதிரி பாத்திரங்கள்
ஏராளமாக
கைவசமுள்ளன

கிடைக்குமிடம்

**ஸாம்ஸன் & கோ**

8/22, பிராட்வே...மதராஸ்.

murli